

ஸ்ரீரங்கம் ஸ்ரீரங்கநாதர் தேவாலயம்.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 14 | விபவஹு மார்கழிமீ கஉ | 1928ஹு டிசம்பர்மீ 15உ | பகுதி 6

## கடவுள் வணக்கம்.

மத்தமத கரிமுகிற் குலமென்ன நின்றிலகு
வாயிலுடன் மதியகடுதோய்
மாட கூடச்சிகர மொய்த்த சந்திரகாந்த
மணிமேடை யுச்சிமீது
முத்தமிழ் முழக்கமுடன் முத்தநகை யார்களொடு
முத்துமுத் தாய்க்கு லாவி
மோகத்தி ருந்துமென் யோகத்தி னிலைநின்று
மூச்சைப் பிடித்த டைத்துக்
கைத்தல நகப்படை விரித்தபுலி சிங்கமொடு
கரடிநுழை நூழைகொண்ட
கானமலை யுச்சியிற் குகையூ டிருந்துமென்
கரதலா மலக மென்னச்
சத்தமற மோனநிலை பெற்றவர்க ளுய்வார்கள்
சனகாதி துணிவி தன்றோ
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்த சிவமே. (1)

கொழுந்தா துறைமலர்க் கோதையர் மோகக் குரைகடலில்
அழுந்தாத வண்ணநின் பாதப் புணைதந் தருள்வ தென்றோ
எழுந்தா தரவுசெ யெம்பெரு மானென் றிறைஞ்சி விண்ணோர்
தொழுந்தாதை யேவெண் பொடிபூத்த மேனிச் சுகப்பொருளே. (2)

நிற்கு நன்னிலை நிற்கப்பெற் றாரருள்
வர்க்க மன்றி மனிதரன் றேயையா
துர்க்கு ணக்கடற் சோங்கன்ன பாவியேற்
கெற்கு ணங்கண் டென்பெயர் சொல்வதே. (3)

# அரும்பொருள் விளக்கம்.

1. இதனால் மோனநிலை பெற்றவர்களின் சிறப்பு உணர்த்தப்படுகின்றது.

(இ-ள்.) எல்லாப் பொருள்களிலும் நிறைந்து அகண்ட வஸ்துவாகியும் உண்மை யறிவானந்த வடிவமாகியும் விளங்கும் மங்கள வஸ்துவே! மத யானைகள் மேகவருக்கத்தைப் போன்று விளங்கும் வாயிலையும், சந்திரமண்டலத்தினைப் பொருந்தும் சிகரத்தினையுமுடைய மாளிகைகளில் சந்திரகாந்தக் கற்களால் நிருமிக்கப்பெற்ற நவரத்தின கசிதமான மேடைகளில் வீற்றிருந்து இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழ் கோஷத்தின் சுவையை நுகர்வதோடு முத்துக்களையொத்த பற்களையுடைய மங்கையரோடு மிகுந்த பிரியமாகக் கொஞ்சி விளையாடி மோகசாகரத்தில் மூழ்கிக் கிடந்தாலென்ன நஷ்டம்? யோகமார்க்கத்தில் ஸ்திரமாகநின்று வாயுவைத் தடுத்து, கைகளில் நகமாகிய ஆயுதங்களை விரித்த புலி, சிங்கம், கரடிகள் புருந்து தங்கும் அடர்ந்த கானகத்திலும், மலையுச்சியிலும், குகையிலும் இருந்துவிட்டால் என்னலாபம்? (ஒன்றுமில்லை) உள்ளங்கை நெல்லிக்கனிபோல் (தெளிவாக) ஆரவாரங்களின்றி மௌனநிலை பெற்றவரே உஜ்ஜீவிப்பர்; ஜனகாதி முனிபுங்கவருடைய உறுதி இதுவேயாம் என்க.

"மத்தமத கரிமுகில்..................மோகத்திருந்துமென்" என்பது, மறுமை யுணர்வின்றி உலகியற் சிற்றின்ப பரவசராய் மூழ்கிக் கிடக்கின்றமையை விளக்கி நிற்கின்றது. "யோகத்தி னிலைநின்று..............குகையூ டிருந்துமென்" என்பது, காமிய நோக்கங்கொண்டு உலகியல் விவகாரங்களை விட்டொழித்து தேகேந்திரியங்களை ஒறுத்து அரிய தவஞ்செய்தலை உணர்த்துகின்றது. அகப்பற்றுப் புறப்பற்றுக்களை அறவே ஒழித்தலின்றி இங்ஙனம் வருந்தி முயன்றாலும் வீட்டின்பம் பெறல் அரிது; இவர்கட்கும் உலகியல் மோகத்தில் விருப்புற்றவர்கட்கும் வேற்றுமை இல்லை என்பார் "என்" என்ற வினா வாயிலாக இன்மையை உணர்த்தினார். அழியாத பேரின்பம் அடைய விரும்புவார்க்கு எத்தகைய ஆர்ப்பாட்டமுமின்றி மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்று கரணங்களும் மோனநிலை பெறவேண்டுமென்பார் "சத்தமற மோனநிலை பெற்றவர்க ளுய்வார்கள்" என்றார். "சனகாதி துணிவிதன்றே" என்றது, இந்த உண்மையைத் தெளிவு படுத்தவந்த எடுத்துக்காட்டு.

*　　　*　　　*　　　*

2. இதனால் மோகக்கடல் கடத்தற்குப் பாதப்புணை தருமாறு வேண்டுகிறார்.

தாது—மகரந்தப்பொடி. உயிர்கட்கு மோகத்தைக் கடத்தல் அரிதாகலின் அதைக் கடலோடு உவமித்தார். புணை—மரக்கலம். தாதை—தந்தை. வெண்பொடி—திருநீறு.

*　　　*　　　*　　　*

3. இதனால் நன்னிலைக்கண் நின்ற பெரியாரது சிறப்பை யுணர்த்துகின்றார்.

நன்னிலை—சமரச சன்மார்க்க அருள்நிலை. இந்நிலையி னின்றவர் திருவருட் பேற்றிற் குரியராகி கடவுணிலை யடையதலின் "மனிதரன்று" என்றார். சோங்கு—மரக்கலம்.




## ஆடம்பர வாழ்க்கை.

நவீன நாகரிகத்தின் வேகம் நமது நாட்டில் கெம்பீரமாய்ப் பரவி வருகிறது. இதன் முன்னிலையில் நமது ஆன்மார்த்த நாகரிகம் தலைவணங்கி ஏங்கி நிற்கிறது. இந்தியாவின் பண்டைப் பெருமையெல்லாம் கனவு ஆகிவிட்டது. முற்காலத்தில் ஆன்ம விளக்கமே மக்கட்குரிய லட்சியமாயிருந்தது. தற்காலம் ஆடம்பர நாகரிகமே குறியாயிருக்கிறது. மறுமையைப் பற்றிய சிந்தனை மக்கள் உள்ளத்தில் இல்லை. உண்மை ஒழுக்கங் குடிகொண்டிருந்த நாட்டை வஞ்சனையும் பொய்யும் சூழ்ச்சியுங் கவர்ந்து கொண்டன. இக்காலத்தில் யோக்கியமாயும் உண்மையாயும் காலக்ஷேபம் செய்தல் வெகுதுர்லபம். மக்கள் உள்ளத்தைப் பண்படுத்தத்தக்க ஒழுக்கக் கல்வி அடியோடு குன்றிவிட்டது. ஆங்கிலக் கல்வி ஆதிக்கம் பெற்று நாட்டு மொழிகளையும் கலைகளையும் புறக்கணிக்கச் செய்துவிட்டது. ஆங்கிலக் கல்வி பல நன்மைகளோடு அநேக தீமைகளையும் தந்து வருகிறது. கோடிக்கணக்கான மக்கள் கல்வி யறிவின்றி அறியாமையோ டிருக்கின்றமைக்கு ஆங்கிலக் கல்வியும் ஒரு காரணமெனலாம். எல்லா மக்கட்கும் கல்வி புகட்டத்தக்க சௌகரியத்திற்குத் தடையாக ஆங்கிலக் கல்விக்காகச் செலவிடும் பெருந்தொகை குறுக்கே நிற்கிறது. நாட்டு மொழிகட்கு ஆக்கந்தந்து சரியான முறையில் போதிக்கத் தொடங்கினால் இப்போது கல்விக்காக ஒதுக்கப்படும் பொருளைக் கொண்டே எல்லா மக்களையும் சிறந்த கல்வியாளராக்கி விடலாம். மேனாட்டு விஞ்ஞான ஆராய்ச்சியும் நமது நாட்டு ஆன்மார்த்த ஆராய்ச்சியும் கலந்த கல்வி முறையே தற்போது வேண்டிற்பாலது. பலவித காரணங்களால் இந்திய நாடு வறுமையில் மூழ்கியிருக்கிறது. நாட்டில் வருவாய் சுருங்கி செலவு மிகுந்திருக்கிறது. முக்கியமாய் அரசியல் நிர்வாகத்திற்குக் கோடிக்கணக்கான திரவியம் ஆண்டுதோறும் வெளியிற் போய்விடுகிறது. இந்த நிர்வாகச் செலவு இங்கேயே தங்குவதாயிருந்தால் அநேக பலன் தரத்தக்க காரியங்களைச் செய்து கொள்ளலாம். பெரும்பாலும் இந்திய விவசாயி எவ்வளவு தரித்திரத்தை அநுப்விக்கக் கூடுமோ அவ்வளவையும் அநுபவிக்கிறான். அதிலும் புன்செய் விவசாயியைப் பற்றிச் சொல்ல வேண்

டுவதில்லை. சில்லறை வியாபாரங்களைத் தவிர மேனாடுகளிலுள்ளபடி கூட்டுறவு முறைகொண்ட பெரிய உலக வர்த்தக முறைகளும் கைத் தொழில் முறைகளும் நமது மக்கட்குத் தெரியாது என்று நாம் அடிக்கடி சொல்லி வந்திருக்கிறோம். இவை யெல்லாம் அவ்வக் கல்விப் பெருக்கத்தினாலேயே பெறத் தக்கவையாகும். இவற்றை எல்லாப் பாமர மக்கட்கும் ஆங்கிலக்கல்வி மூலம் போதிக்கக்கூடவில்லை என்பதை விளக்கவே முன்னே குறிப்பிட்டோம். மேலேசொன்ன காரணங்களால் தினசரி வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்கள் நமது நாட்டு மக்களால் உற்பத்தி செய்ய முடியவில்லை. இந்நிலையில் நவீன நாகரிக மோகமும் ஜனங்களைப் பலமாய்ப் பற்றிக்கொண்டது. அந்நிய நாட்டுப் பொருள்கள் தினந்தோறும் கப்பல் கப்பலாக வந்து குவிந்துகொணடிருக்கின்றன. அதாவது வருடமொன்றுக்கு நூற்றைம்பதுகோடியே முப்பத்தொருலட்ச ரூபா பெறுமான பொருள்கள் இறக்குமதி யாகின்றன. இக்கால நாகரிகம் வேண்டாத தேவைகளை வேண்டும்படிச் செய்துகொண்டிருக்கிறபடியால் மக்கட்கு அவற்றை வாங்காமலிருக்க முடிகிறதில்லை. வறுமைநிலை ஒருபக்கம் ஆடம்பரம் ஒரு பக்கம் ஜனங்களைத் துன்பம் செய்துகொண்டிருக்கின்றன.

நாட்டின் தற்கால நிலையைப்பற்றி ஒருவாறு பொதுவாக மேலே கூறினோம். இனி நாம் அனுஷ்டிக்கவேண்டிய முறைகளையும் கடமையையும் பற்றி ஒரு சிறிது ஆராய்வாம். ஆடம்பர வாழ்வு எப்போதும் அநர்த்தத்தையே விளைக்கும். வெறும் டம்பச் செலவு செய்து ஆடம்பரமாக வாழ்ந்துகெட்ட எத்தனையோ குடும்பங்களை நாம் கண்கூடாகக் கண்டு வருகின்றோம். எளிய ஆடம்பரமற்ற வாழ்வு ஒன்றே ஒருவனுக்குச் சாந்தியளிக்கும். எல்லாவித மத உண்மைகளும் ஆடம்பரத்தை வெறுக்கின்றன. உலகில் புகழ்பெற்ற மத ஸ்தாபகர்களும் பெரியோர்களும் ஆடம்பரமற்ற வாழ்க்கையை நடத்தி வந்ததாகவே நாம் கேள்விப்படுகின்றோம். நமது நாட்டு ஒழுக்க நூல்களும் எளிய வாழ்வையே வற்புறுத்துகின்றன.

மனிதனுக்கு ஆசை பெருகப் பெருக துன்பமும் அதிகமாகிறது. இவன் எந்தப் பொருளை விரும்புகின்றானோ அந்தப் பொருளை அடைய முயற்சிசெய்யவேண்டும். மனித முயற்சி எல்லாம் பலன் தந்து விடுமென்று சொல்வதற்கில்லை. "ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டொன்றாகும்" ஆதலின் கவலைக் கடலின் மூழ்க நேரும். பேராசைகொண்ட ஒருவன் இந்த உலகில் சாந்தியாக வாழ முடியாது. ஆசைப்பேய் அடாத நெறிகளிலும் போகத் துணிவு கொடுத்து விடுகிறது. ஆதலால் ஆடம்பரத்துக்கு ஆசை காரணமாயிருத்தலின் அதை ஒழிக்காவிட்டால் சுகம் என்பது சித்திக்காது. மேனாடுகள் இந்த உண்மையை அலட்சியம் செய்துவிட்டு ஆடம்பரத்தில் பற்றுள்ளங்கொண்டு மேலோங்கி நிற்கின்றன. அது எப்படி முடியுமோ தெரியவில்லை.

சிலர் சௌகரியமிருந்தால் ஆடம்பர வாழ்வு நடத்தக்கூடாதா? என்று கேட்கலாம். சிறிது ஊன்றிச் சிந்திப்போர் இந்தக் கேள்வி கேட்கமாட்டார்கள். அதிகச் செலவில் வாழவேண்டிய ஆடம்பர வாழ்வுக்கு ஒரு நியதி இல்லை. எவ்வளவு உன்னத சுக போகத்தில் இருந்தாலும் அப்போதும் அதிருப்தியும் கூடவே இருந்துகொண் டிருக்கும். உதாரணமாக உலகில் சக்கரவர்த்திகளைக் காட்டிலும் இடம், பொருள், ஏவல்பெற்றுச் சுகபோகத்தில் மூழ்குபவர் ஒருவருமிலர். பண்டைக்காலந் தொடங்கி இக்காலம்வரை எந்த அரசனுடைய வாழ்வை ஆராய்ந்தாலும் ஒவ்வொருவனும் பற்பல துன்பங்களை அநுபவித்தமை நன்கு விளங்கும். எளியவன் வயிற்றுக்கில்லையென்று வருந்துகிறான். நடுத்தரமாகவுள்ளவன் இலட்சப்பிரபு ஆகிவிடப் பார்க்கிறான். இலட்சப்பிரபு கோடீசுவரனாகப் பார்க்கிறான். கோடீசுவரன் அரசனாகிவிடப் பார்க்கிறான். அரசனாகவுள்ளவன் தன்னுடைய தேசத்தோடமையாது வேற்றரசர் நாடுகளையுங் கவரப் பார்க்கிறான். ஆதலால் எத்தகைய ஆடம்பர வாழ்வும் மனச்சாந்தியை அளிக்காது என்பதை யாவரும் உணர்தலே அறிவுடைமையாகும்.

நமது சாஸ்திரங்கள் பற்றறுத்தலை விசேஷ அம்சமாக ஒழுக்கத்தில் வைத்து வற்புறுத்துகின்றன. பேரின்பத்துக்கு வீடு என்ற பெயர் இருக்கின்றமை யாவரு முணர்ந்தவிஷயம். இது விடு என்ற வினைப்பகுதியின் முதனிலை நீண்ட தொழிற்பெயர். விடுதல் என்பது இதன் பொருளாகும். வடமொழியில் மோட்சம் என்பது இப் பொருளிலேயே வழங்கிவருகிறது. இதிலிருந்து நாம் தெரிந்து கொள்ளவேண்டிய உண்மை என்னவென்றால் உலகப் பொருள்களில் பற்றுள்ளம் வைத்திருப்பது ஒரு பெரும் சுமை; அப்பொருள்கள் நமதெண்ணப்படி எளிதில் நமக்குக் கிடையா; அதனால் கவலை அதிகரிக்கிறது; ஆதலால் அந்தப் பற்றுச் சுமையை இறக்கிவிடுதலே (விட்டுவிடுதலே) இன்பம் என்பதேயாகும். "ஈதலறம்.........**இம் மூன்றும் விட்டதே பேரின்ப வீடு**" என்ற ஔவையார் அமுத மொழியையும் நோக்குக.

ஐம்புல வொடுக்கமும் அவாவறுத்தலைச் சார்ந்ததே. உலகத்தில் இன்பம் நுகர்தல் என்பது மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து பொறிகளையும் திருப்தி செய்தலே யாகும். அதாவது உடம்புக்கினியவற்றை ஸ்பரிசித்தல், வாய்க்கினியவற்றை உண்டல், கண்ணுக்கினியவற்றைக் காண்டல், மூக்குக்கினியவற்றை முகர்தல், செவிக்கினியவற்றைக் கேட்டல் ஆகும். பல்வேறு ரூபமான நுகர்ச்சிகள் இவ்வைந்தனுள் அடங்கும். இவற்றின் நுகர்ச்சிக்கு ஒரு எல்லையே யில்லை. ஒவ்வொருவருக்கும் இன்பவேட்கை சகஜமாயுண்டு. மனிதன் இயற்கையோ டியைந்திருந்த காலத்து இவற்றைப் பிரயாசையின்றி அநுபவித்தான். இது செயற்கை உலகம். எல்லாம்

பணமயமா யிருக்கிறது. அதிலும் நமது நாட்டில் வறுமை, அறியாமை, நோய் முதலியன ஆதிக்கம் பெற்றிருக்கின்றபடியால் எவ்வாறு இன்பவாழ்க்கை நடத்தமுடியும்?

எந்த நாட்டிலும் தற்காலம் இந்தியாவிலுள்ள ஸ்திதியைப் போல் காணல் அரிது. ஒரு மனிதனுக்குக் குறைந்த பட்சம் தேவையான உணவு $1\frac{1}{2}$ இராத்தல். ஆனால் இப்போது இங்கே கிடைப்பது ஒரு இராத்தலுக்கும் குறைவே. இங்கிலாந்தில் 2 முதல் $2\frac{1}{2}$ இராத்தல் வரை கிடைக்கின்றதாம். வறுமையின் கொடுமையாலும் இதன் பயனால் ஏற்படும் சுகாதாரக் குறைவினால் உண்டாகும் தொத்து நோய் முதலியவற்றாலும் ஆண்டுதோறும் பல்லாயிரக் கணக்கான மக்கள் மாள்கின்றனர். இந்த உண்மை, இந்தியாவின் மரண விகிதத்தையும் இங்கிலாந்து முதலிய மேனாடுகளின் மரண விகிதத்தையும் எடுத்துப் பார்த்தால் நன்கு புலப்படும்.

நமது மக்களை வறுமையும் நோயும் வாட்டுவதோடு சரியான முறையோடு கூடிய எத்தகைய கல்வி யறிவும் இன்மையால் அறியாமையும் சேர்ந்துகொண்டு அலைத்துவருகிறது. இவர்கட்கு மேனாட்டினரைப் போன்ற உலகியல் விஞ்ஞான அறிவும் இல்லை; நமது நாட்டு ஒழுக்கக் கல்வி யறிவும் இல்லை. இதனால் தரித்திரம் பிடுங்கித் தின்றுகொண் டிருக்கும்போதே ஆடம்பர வேட்கையும் புகுந்து அலக்கழித்துக்கொண் டிருக்கிறது.

பாமர மக்களை முன்னேற்றித் தேசத்தை விடுதலை செய்யும் பொறுப்பு நமது நாட்டுப் பிரபுக்களைச் சார்ந்திருக்கிறது. இந்தப் புண்ணிய கைங்கரியத்துக்கு இவர்களே தகுதி வாய்ந்தவர்களாகவும் சௌகரிய முள்ளவர்களாகவும் இருக்கிறார்கள். இவர்களிடமுள்ள திரவியத்தை இவர்கள் தக்க வழிகளில் பயன்படுத்த வேண்டும். எல்லா ஊர்களிலும் நடையுடை பாவனை விஷயத்தில் எல்லாரும் பணக்காரர்களையே ஆதர்சமாகப் பின் பற்றுகிறார்கள். கலியாணம் காது குத்தல் முதலிய விசேஷ நாட்களில் நமது பிரபுக்கள்செய்யும் டம்பச் செலவுக்கு அளவே கிடையாது. இவ்விஷயங்களில் இவர்களைச் சூழ்ந்துள்ள நடுத்தரக் குடும்பத்தினர் பாடும் ஏழைகள் பாடும் திண்டாட்டத்தில் முடிகிறது. பணம் படைத்தவர்களைப்போல் செலவு செய்ய இவர்களால் எப்படி முடியும்? சாதாரண நிலையிலுள்ளவர்கட்குக் கடன் வாங்கியாவது ஆடம்பரமாகச் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிடுகிறது. விசேஷ நாட்களில் ஏழைகளின் துயரத்தைக் கூறவும் வேண்டுமோ?

இவர்களுடைய கஷ்ட நஷ்டங்களைப் பணக்காரர் லட்சியம் செய்வதில்லை. அவர்கட்குப் பலருடைய புகழுரைகளே குறி. டம்பத்துக்காக இலட்சக்கணக்காகச் செலவு செய்து கோவில்களைக் கட்டுகிறவர்களும், தங்களுடைய சௌகரியத்துக்கும் பெரிய உத்தி

யோகஸ்தர்களுடைய செளகரியத்துக்கும் மடம் சத்திரங்களைக் கட்டு கிறவர்களும், பலர் மெச்ச அன்னதானம் செய்கின்றவர்களும் நமது நாட்டில் பலரிருக்கின்றனர். இப்படி வீண் ஆடம்பரத்துக்காகச் செய்யுங் காரியங்களால் புண்ணியங் கிடைத்துவிடு மென்றோ பொது மக்கட் குரிய சிறந்த ஊழிய மென்றோ எப்படி மதிக்க முடியும்?

சாதாரணமாக சட்ட சபை, ஜில்லா, தாலுகா போர்டுகட்கும், நகர பரிபாலன சங்கங்கட்கும் அங்கத்தினராக விரும்புவோருட் பெரும்பான்மையோர் ஆடம்பரத்தையே பிரதானமாகக்கொண்டிருக் கின்றனர். இவர்கள் உண்மையான பொதுஜன ஊழியத்துக்காக ஸ்தானம் பெற விரும்புகின்றார்கள் என்று சொல்ல முடியாது. ஏனெனில் ஊழியமே நோக்கமாக உள்ளவர்கள் தேர்தல் காலங்களில் பல்லாயிரக் கணக்கான ரூபாக்களைச் செலவழிக்க வேண்டுவதில்லை. அத்தகையவர்களை ஒரு பைசாச் செலவின்றியே பொது ஜனங்கள் தேர்ந்தெடுத்து விடுவார்கள். இதனால் ஆடம்பரம் ஒன்றே இவர் களுடைய பிரதான நோக்கம் என்பது இனிது விளங்கும். உண்மை யில் இவர்கட்குப் பாமர மக்களிடம் அநுதாப மிருப்பின் தேர்தல் களில் வீண் செலவு செய்யும் பொருள்களைக் கொண்டு விவசாயம், கைத்தொழில், வர்த்தக அபிவிருத்திகட்கான கல்வி ஸ்தாபனங்கட் குச் செலவிடுதல் பெரும் பயன் விளைப்பதாகும் என்பதைத் தெரிந்து கொள்ளவேண்டும். தேர்தல்களில் பெருந் தொகையைச் செலவு செய்து அங்கத்தினராகியும் நாட்டின் உண்மை முன்னேற்றத்திற் கான காரியங்களை இவர்கள் சாதிப்பதாகவும் தெரியவில்லை. ஆடம் பரத்துக்காகத் தேர்தல்களில் வீண் விரயம் செய்து செய்து கட னாளிகள் ஆவதுதான் கண்ட பலன்.

இதனால் ஒவ்வொருவரும் ஆடம்பரமற்ற எளிய வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டுமென்றே வற்புறுத்துகிறோம். மனவமைதி—சாந்தி வேண்டுமென்றால் எளிய வாழ்க்கையை மேற்கொள்வதனால் தான் அடைய முடியும். ஆடம்பரத்தால் எக்காலத்திலும் திருப்தி ஏற்படாது. ஆடம்பரம் அல்லல்களின் ஊற்று. ஆடம்பரத்தை விரும்புவோர்கள் தங்கட்கும் தங்களைச் சூழ்ந்தவர்கட்கும் கேடு சூழ்பவர்களாகிறார்கள். உண்டி, உடை, நகை, வாகனாதிகளில் ஆடம் பரத் தன்மை இருக்கக்கூடாது. அவற்றில் அறிவுடைமை விளங்க வேண்டும். எல்லாம் உண்மையான தேவையைப் பொறுத்ததாயும் போதிய செளகரியத்தைப் பொறுத்ததாயு மிருக்கவேண்டும். புண்ணி யங் தேடவென்று பொருளற்ற விஷயங்களில் பொருளைத் தொலைக் கக் கூடாது. இங்ஙனம் ஆடம்பரமற்ற அறிவுடைய வாழ்க்கை நடத் தினால் நாடு முன்னேற்ற மடைந்து வெகு விரைவில் விடுதலைக்குப் பக்கத்தில் வந்துவிடும்.

ஓம் தத் ஸத்.

---

# தமிழ் மொழியின் மாண்பு.

(ஆசிரியர். A சுருளியாண்டி கௌடா.)

"வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி அதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை உலகமெலாந் தொழுதேத்தும்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனில்
கடல் வரைப்பி னிதன் பெருமை யாவரே கணித்தறிவார்."

குட முனியின் நாவில் ஜனித்து, ஆரியத்தின் மடியில் வளர்ந்து, தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய மொழிகளின் நேயம் பெற்று, சங்கப் புலவர்களின் நாவில் சஞ்சரித்து, வித்துவான்களின் வாக்கில் விளையாடி, திராவிட தேசம் முழுதும் ஏகச் சக்ராதிபத்தியஞ் செலுத்திவந்த நந்தமிழ் அரசியைத் தற்போது இகழலாமா?

"யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல்
இனிதாவ தெங்கும் காணோம்
பாமரராய் விலங்குகளாய் உலகனைத்தும்
இகழ்ச்சி சொலப் பான்மை கெட்டு
நாமமது தமிழரெனக் கொண்டிங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ சொல்லீர்!
தேமதுரத் தமிழோசை உலக மெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்.

யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவர்போல் இளங்கோவைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை உண்மை
வெறும் புகழ்ச்சி யில்லை;
ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர்களாய்
வாழ்கின்றோம் ஒரு சொற் கேளீர்!
சேமமுற வேண்டுமெனில் தெரு வெல்லாம்
தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்."

என்று பாரதியாரால் போற்றப்பெற்ற நந்தமிழ் மொழியானது இதர மொழிகளைக் காட்டினும் தொன்மையும் ஏற்றமும் வாய்ந்ததென்பதை ஒவ்வொரு தமிழரும் உணரல் வேண்டும்.

நம்மைத் தாலாட்டித் தூங்கவைத்ததும், நம் மழலைச் சொற்களால் நம் பெற்றோரை மகிழ்வித்ததும், நாம் குழந்தைப் பருவத்தில் பேச ஆரம்பித்த போது முதலில் உச்சரித்ததும், நம் அன்னை தந்தையர் நமக்கு அமுதொடு புகட்டியதும், மாதா, பிதா, குரு முதலானோர் நமக்கு முதலில் உபதேசித்ததும், தொன்றுதொட்டு நம் முன்னோர்களெல்லாம் பேசியும் எழுதியும் வந்ததும், நம் அன்னை தந்தையர், சுற்றத்தார், இஷ்ட மித்திரர் முதலானோர்

பேசுகிறதும், நம் வீட்டுப் பாஷையும் நாட்டுப் பாஷையும் அமிழ்தினு மினிய நந் தமிழ்மொழியே யன்றோ?

"கண்ணுதற் பெருங் கடவுளும் கழகமோ டமர்ந்து
பண்ணுறத் தெரிந்த தாய்ந்தவிப் பசுந்தமிழ் ஏனை
மண்ணிடைச் சில இலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணிடைப் படக் கிடந்ததா எண்ணவும் படுமோ."

இவ்வளவு அருமையும் பெருமையும் வாய்ந்த நந் தாய்மொழியை அலக்ஷியஞ் செய்துவிட்டு சமஸ்கிருதம், ஆங்கிலம், லத்தீன் முதலிய அன்னிய பாஷைகளை நாம் விரும்புதல் அழகோ? சுற்றத்தாரை விடுத்து அந்நியரை நேயங் கொண்ட ஒருவன் ஆபத்துக்காலத்தில் எங்ஙனம் வருந்த நேருமோ, அங்ஙனமே சுயமொழியை விடுத்த ஒருவனும் துயருறல் நேரும். சமஸ்கிருதமும் லத்தீனும் மிகவும் சிறப்புப் பொருந்திய பாஷைகள் தாம். அவகாசமுள்ளவர் தாய் பாஷையொடு அவைகளையுங் கற்றல் நலமே. ஆயின் தாய் மொழியை நன்கு கல்லாது பிற மொழிகளைக் கற்க விரும்புதல் மாதா வயிறெரிய மகேசுவர பூஜை செய்வதை யொக்கு மன்றோ?

மஹரிஷி ரவீந்திரநாதர், பங்கிம் சந்திர சாட்டர்ஜி, லோகமான்ய திலகர், ஸர் ஜெகதீச சந்திர வஸு (Bose), மஹாத்மா காந்தியடிகள் போன்ற மேதையர்களெல்லாம் தாங்கள் எழுதி வெளியிட்ட நூல்களைத் தத்தம் தாய் மொழிகளிலேயே எழுதுவதற்குக் காரணம் என்ன? ஆங்கிலந் தெரியாமையா? அன்று; அன்று. தத்தம் தாய் மொழிப் பற்றே.

ஆங்கிலம் முதலிய ராஜ பாஷைகளைக் கற்கவேண்டாமென யான் கூறவில்லை. ஏனெனின், ராஜ பாஷையாகிய ஆங்கிலந் தெரியாதிருப்பின் அவ்வாங்கில ராஜாங்கத்தில் வாழ்தல் நமக்குக் கஷ்டமாய்த்தானிருக்கும். அன்றியும் உலகத்திற்கு மிகவும் உபயோகமுள்ள அநேக விஷயங்களைப்பற்றியும் ராஜபாஷைகளில் பல நூல்கள் உளவாதலின் அவைகளைக் கற்கவேண்டியதும் அவசியமே. ஆயின் சுய மொழியை விடுத்து அவைகளைக் கற்றல் உசிதமன்று. நம் மிந்திய மக்களிற் பலர் தம் தாய் மொழியில் கையொப்ப மிடவும் அறியாதவராயிருக்கின்றனர். இன்னும் ஆங்கிலங் கற்றோரிற் சிலர், தமிழ் மொழி தெரியாதிருத்தல் தங்களுக்குக் கௌரவமென எண்ணுகின்றனர். நிற்க, ஆங்கிலமும் தமிழும் கலந்துகொண்டு, "என்ன சார்! உங்கள் பிரதர் மகனுக்கு வருகிற சண்டேயன்று மேரியேஜாமே?" என அவலக்ஷணமாய்ப் பேசுவோரும் நம்மில் அநேகருளர்.

சுய பாஷா ஞானம் எவ்வளவு குறைவா யிருக்கின்றதோ அவ்வளவுக்கு ராஜ பாஷைகளில் தங்களைச் சமர்த்தர்களென்று சகலரும் நினைப்பார்களென எண்ணிச் சிலர் சுய மொழியை முற்றும் அலக்ஷியஞ் செய்கின்றனர். அத்தகையவர்களுக்குத் தமிழ்ப் புஸ்தகங்களைக் கையால் தீண்டுதல் பாம்பின் புற்றுக்

குள் கையை விடுதல் போன்றும், தமிழில் பேசுதல் வேப்பிலைக் கஷாயம் குடித்தல் போன்றும், தமிழ் மொழியைக் கேட்டல் கர்ண கடூரமாயு மிருக் கும். அந்தோ! தேசாபிமானமும் பாஷாபிமானமுமற்ற இவர்கள், ஆங்கி லேயர் முதலிய ஐரோப்பியர்கள் தங்கள் தாய் பாஷைகளை எவ்வளவோ கௌரவமாய்ப் போற்றி வணங்குகிறார்க ளென்பதை அறியார்கள் போலும். தமிழ் வேதமாம் திருக்குறளையும், நாலடியார், நீதிநூல் போன்ற இதர பிரபந் தங்களையும் இவர்கள் ஒரு முறையேனும் புரட்டிப் பார்த்திருப்பின், கவிச் சக்கரவர்த்தி கம்பரின் கற்பனைகளைக் கனவிலேனும் கேட்டிருப்பின், தமிழ் மூதாட்டியாராகிய ஔவையின் அருமை நூல்களையும், முச் சங் கங்களின் வரலாற்றையும் கொஞ்சமேனும் அறிந்திருப்பின் இங்ஙனம் தமிழ் மொழியை அலக்ஷியஞ் செய்வரோ? செய்யார். செய்யார்.

நிற்க, தமிழின் தற்கால க்ஷீண நிலையை நோக்கின் பாஷைப் பற்றுள்ள தமிழ ரெவரும் வருந்தாம லிருக்க முடியாது. தேசாபிவிருத்திக்குக் கார ணம் பாஷாபிவிருத்தியே என்பதைத் தேசத் தலைவர்கள் அடிக்கடி பேசி யும் எழுதியும் வரினும் அனுஷ்டானத்தில் காட்டுவோர் அற்பத் தொகை யினரே. தமிழ் மக்களே! வள்ளுவர், இளங்கோ வடிகள், கம்பர், புகழேந்தி, ஒட்டக்கூத்தர், காளமேகம், ஔவை போன்ற பழந் தமிழ்ப் பேரறிஞர்களைப் பற்றிக் கொஞ்சம் சிந்தியுங்கள். உங்கள் மனதில் ஆவேச மெழவில்லையா? எழுமின்; விழிமின்; கருதிய கருமம் கைகூடும் வரை உழைமின்; உழைமின் என்ற விவேகானந்தரின் வீரமொழிகள் உங்கள் செவியில் விழவில்லையா? தமிழபிமான மின்மையெனும் தூக்கத்தினின்றும் எழுந்திருங்கள். தமிழின் அபிவிருத்திக்காக உடல், பொருள், ஆவி மூன்றையும் ஒருங்கே தத்தஞ் செய்து உண்மையாய் உழைக்க முன்வாருங்கள்.

தமிழின் பண்டை மாண்புகளைப் பற்றி இன்னும் எவ்வளவோ பகர லாம். பயனென்ன? சுமார் 900 வருடங்களுக்கு முன் தோன்றிய மலை யாள பாஷையானது சென்ற 15 வருட காலத்திற்குள் பாஷாபிமானிகளின் குன்றா ஊக்கத்தால் எவ்வளவோ தூரம் விருத்தியாகி யிருக்கின்றது. ஆந்தி ரர்கள் தெலுங்கின் அபிவிருத்திக்காக எவ்வளவோ பாடுபட்டார்கள்—பட்டுக் கொண்டிருக்கிறார்கள். பண்டித வீரேசலிங்கம் பந்துலு தெலுங்கின் முன் னேற்றத்திற்காக எத்தனையோ நூல்களை யெழுதி வெளியிட்டுளார். இன் னும் வங்க பாஷையின் விருத்தியோ அதிகம்.

நந் தமிழ் மொழியானது பண்டைப் பொலிவைப் பெற்றுப் பிரகாசிக்க வேண்டுமாயின் தமிழ் நாட்டில் பல தமிழ்த் தொண்டர்கள் தோன்றல் வேண் டும். தமிழ் நாட்டிலுள்ள ஒவ்வொரு குக்கிராமத்திலும் தமிழ்ச் சங்கங்களும், வாசக சாலைகளும் ஏற்படுத்தல் வேண்டும். தவிர, நாட்டிற்கு நலஞ் செய்யும் புத்தகங்களையும், வர்த்தமானப் பத்திரிகைகளையும் வாங்கி ஆதரிப்பதுடன்,

தனவந்தர்கள் நாடெங்கும் பல தமிழ்க் கலாசாலைகளையும் பாடசாலைகளையும் இலவசமாகத் திறக்க முன்வரல் வேண்டும். இன்னும் பல பாடப் புத்தகங்கள் எழுதப் பெறுவதுடன் தமிழில் பல சொற்பொழிவுகள் நிகழ்த்தப்படுதல் வேண்டும். ஆரம்பாசிரியர்களும் மற்ற ஆசிரியர்களும் அதிக ஊக்கத்தோடு உழைக்கும் வண்ணம் அவர்களுக்குத் தகுந்த சம்பளம் தர முயலவேண்டும். நிற்க, அன்னிய மொழிகளிலிருந்து அநேக நூல்கள் தமிழில் மொழி பெயர்க்கப் பெறல் வேண்டும். நம் பெருமைவாய்ந்த நூல்களையும் பிறமொழிகளில் மொழிபெயர்க்க ஏற்பாடு செய்வதுடன், தமிழில் புதிதாய் அருமையான நூல்கள் எழுதுவோருக்குத் தக்க ஆதரவளித்தல் வேண்டும். பூத பௌதிக சாஸ்திரங்களைப் பற்றித் தமிழில் முதனூல்கள் எழுதப் பெறுவதுடன், மிடியால் வருந்தும் தமிழ்ப் பண்டிதர்களுக்கு ஒவ்வொரு தமிழரும் தம்மால் கூடிய உதவியைச் செய்தல் வேண்டும். தமிழ்நாட்டில் தமிழ்ச் சர்வ கலாசாலை யொன்று ஸ்தாபிக்கவேண்டு மென்பதாகத் தமிழ்நாடு முழுதும் தீவிரமான கிளர்ச்சி செய்வதுடன், தமிழர் இயக்கம் ஸ்தாபித்து சகல துறைகளிலும் தீவிரமாக வினையாற்றுதற்கு எல்லாத் தமிழ் மக்களும் உடனே முன்வரல் வேண்டும்.

தமிழர்களே! உற்சாகமெனும் தைலமின்றி மங்கிக் கிடக்கும் நம் பாஷாபிமான மெனும் சுடரை, ஊக்கமெனுந் தூண்டுகோலால் தூண்டிவிட்டுத் தமிழ் மொழியை வளர்க்க முன் வருவோமாக.

“வாழ்க தமிழ் மொழி வாழ்க தமிழ் மொழி
வாழ்க தமிழ் மொழியே
எங்கள் தமிழ் மொழி எங்கள் தமிழ் மொழி
என்றென்றும் வாழியவே
வான மளந்த தனைத்து மளந்திடு
வண் மொழி வாழியவே.”—பாரதியார்.

## சந்தேகம் நீங்குவ தெப்படி?

நீ உனது நண்பனுக்கோ மற்றவனுக்கோ தீங்கொன்றும் புரியாதிருக்கையில் அவன் இன்னொருவனின் போதனையாலோ அல்லது தானே சம்சயித்தோ உன்னைச் சோதிக்கத் துணிகிறான். நீ செய்யவேண்டிய தென்ன தெரியுமா? அவனுக்கு நன்மை தருங் காரியத்தில் பிரவேசித்து, நீ யவனுடன் சேர்ந்து உதவிபுரியின் அவனது சந்தேகம் நீங்கிவிடும். உன்னிடம் மன்னிப்பும் கேட்டுக்கொள்வான். அவன் மனச்சாக்ஷியே அவனைக் கண்டிக்கும்படி விட்டுவிடுவதே சிறந்த கொள்கை.

# வேதாந்த ஸித்தாந்த லேச சங்கிரகம்.

(130-ம் பக்கத் தொடர்ச்சி)

பண்டிதர். K. V. தேவராஜ சாஸ்திரியார்.

ஜீவாத்மா ஏகம். ஒரு சரீரம்தான் ஜீவனுடையது. மற்றவை யெல்லாம் நிர்ஜீவன்கள் என்று சிலர் சொல்லுகின்றனர். வேறு சிலர் ஜீவாத்மா அநேகம் என்று சொல்லுகின்றனர்.

ஆனால் பரமாத்மா ஒன்றுதான். அது ஸச்சிதானந்த ரூபி, அத்விதீயம், ஸ்வயம் பிரகாசம் என்று அநேகம் உபநிஷத் வாக்கியங்கள் சொல்லுகின்றன. ஆனால் கண்களில் உண்டாகும் திமிரம் என்ற வியாதியால் ஒரே சந்திரன் எப்படி இரண்டாகத் தோன்றுகிறதோ அப்படி, ஆத்மா ஒன்றாக இருந்த போதிலும் மாயையால் இரண்டாகத் தோன்றுகிறது. திமிரமில்லாதவர்களுக்குச் சந்திரன் எவ்வாறு ஒன்றாகவே தோன்றுகிறதோ அவ்வாறு மாயை என்ற தோஷமில்லாதவர்களுக்கு ஆத்மா ஒன்றாகவே தோன்றும். கண்களின் திமிரத்தால் சந்திரனிடத்தில் எப்படி த்வித்வம் தோன்றுகிறதோ அப்படி மாயையால் ஆத்மாவின்கண் பிரபஞ்சம் தோன்றுகின்றது. சந்திரனிடத்தில் த்வித்வம் மித்தை யாவதுபோல் ஆத்மாவின்கண் பிரபஞ்சமும் மித்தையாகும். ஆத்மாவின் காரியமாகிய ஆகாயம் ஆத்மாவில்லாமல் இருப்பதில்லை. காரியமாகிய ஆகாயம் எங்கும் நிறைந்த வஸ்துவாக இருப்பதால் காரணமான ஆத்மாவும் எங்கும் நிறைந்த வஸ்துவென்று சொல்லவேண்டுமா? காரியமான ஆகாயம் எப்படி ஒரே வஸ்துவோ அப்படி காரணமான ஆத்மாவும் ஞானிக்கு ஒன்றுதான். இரண்டல்ல. ஆகாயம் ஒன்றாக இருந்தபோதிலும், உபாதியால் (1) கடாகாயம் (குடத்தில் இருக்கும் ஆகாயம்) மடாகாயம் (வீட்டிலிருக்கும் ஆகாயம்) என்று எப்படிப் பலவகைப்படுகின்றதோ அப்படியே பிரம்மமும், உபாதியால் பலவகையாகத் தோன்றும். கடாகாயமும், மடாகாயமும். உண்மையில் எப்படி வெவ்வேறல்லாமல் ஒன்றுதானோ அப்படியே ஆத்மாவும் ஒன்றுதான். எப்படி ஆகாயத்தைத்தவிர ஆகாயம் என்பது வேறானதல்லவோ அப்படி ஆத்மாவைத்தவிர ஆத்மா என்பது வேறல்ல.

தண்ணீர் மேகத்தின் சேர்க்கையால் எப்படி ஆலங்கட்டிகளாகின்றதோ, அப்படி மாயையின் சேர்க்கையால் ஆத்மா பிரபஞ்ச வடிவமாக ஆகிறது. மேகத்தின் சேர்க்கையால் தண்ணீரே ஆலங்கட்டிகளாகத் தோன்றுகின்றது. ஆலங்கட்டி நாசமடைந்தாலும், தண்ணீர் நாசமடைவதில்லை. அப்படியே மாயையின் சேர்க்கையால் ஆத்மாவே பிரபஞ்சமாகத் தோன்றுகின்றது. பிரபஞ்சம் நாசமடைந்தபோதிலும் ஆத்மா நாசமடைவதில்லை. தண்ணீரிலுண்டாகும் நீர்க்குமிழி எப்படித் தண்ணீரைவிட வேறாகத் தோன்றுகின்றதோ அப்படி ஆத்மாவி லுண்டாகும் பிரபஞ்சமும் அதைவிட வேறாகத் தோன்றுகிறது. நீர்க்குமிழி நாசமடைந்தபோதிலும், எப்படி நீர் நாசத்தையடைவதில்லையோ அப்படியே பிரபஞ்சம் நாசமடைந்தபோதிலும் ஆத்மா நாச மடைவதில்லை.

பாம்பின் சட்டையில் தோன்றும் சுத்தமும் அசுத்தமும் எப்படிப் பாம்பைச் சம்பந்திப்பதில்லையோ அப்படியே ஸ்தூலதேகத்தில் தோன்றும் சுத்தமும் அசுத்தமும் ஆத்மாவைச் சம்பந்திப்பதில்லை. எப்படி ஒரு பாம்பு தன் சட்டையைத் தானாக நினைப்பதில்லையோ அப்படி ஞானி தனது

தேகத்தை ஆத்மாவாக நினைப்பதில்லை. பாம்புச்சட்டை நாச மடைவதால் எப்படிப் பாம்பு நாச மடைவதில்லையோ அப்படியே தேகம் நாச மடைவதால் ஆத்மா நாச மடைவதில்லை. நெருப்பில் காய்ச்சப்பட்ட இரும்பை எப்படி மனிதர் நெருப்பாக நினைக்கிறார்களோ அப்படி ஸ்தூலதேகத்தை ஆத்மாவாக நினைக்கிறார்கள்.

எப்படி (1) தாஹகம் (2) தாஹ்யமாவ தில்லையோ, தாஹ்யம் எப்படி தாஹக மாவதில்லையோ அப்படியே ஆத்மா அனாத்மாவாகவும், அனாத்மா ஆத்மாவாகவும் ஆவதில்லை. சூரியனுடைய வெளிச்சத்தால் எப்படி உலகத்திலிருக்கும் வஸ்துக்களெல்லாம் பிரகாசமாகத் தெரிகின்றனவோ அப்படி (1) க்யாதா, (2) க்யேயம், (3) ஞானம் [(1) அறிகிறவன், (2) அறியப்படும் பொருள், (3) அறிவு] இம்மூன்றும் எதனால் பிரகாசமாகத் தெரிகின்றனவோ அதுவே ஆத்மாவாகும். சூரியனுடைய வெளிச்சத்தால் உலகத்திலிருக்கும் வஸ்துக்கள் தெரிவதுபோல ஆத்மப்பிரகாசத்தால், க்யாதா, க்யேயம், ஞானம் இம்மூன்றும் பிரகாசமாகத் தெரிகின்றன.

சர்க்கரையுடன் சேர்ந்த மாவு எப்படிச் சர்க்கரைபோல் பிரியமாகவிருக்கிறதோ அப்படியே ஆத்மாவின் சேர்க்கையால், க்யாதா, க்யேயம், ஞானம் இம்மூன்றும் பிரியமாக விருக்கின்றன. ஒரு பானையிலிருக்கும் தண்ணீர் நெருப்பின் சேர்க்கையால் உஷ்ணமுடையதாக ஆகிறது. நெருப்பு இல்லாவிடில் தண்ணீரில் உஷ்ணம் ஏற்படுவதில்லை. அப்படியே உலகத்திலிருக்கும் பதார்த்தங்கள் ஆத்மபிரகாசத்தின் சேர்க்கையால் பிரகாசிக்கின்றன. எப்படி ஒரே ஆகாயம் அநேக பாத்திரங்களி விருக்கின்றதோ அப்படி ஒரே ஆத்மாவும் அநேக தேகங்களில் இருக்கின்றது.

அநேக பாத்திரங்களில் ஆகாய மிருந்தபோதிலும், உண்மையில் அது எப்படி வேறுபடுவதில்லையோ அப்படி அநேக தேகங்களில் ஆத்மா இருந்தபோதிலும், வேறுபடுவதில்லை. எப்படிப் பாத்திரங்கள் நாசமடைந்தபோதிலும், ஆகாயம் நாசமடைவதில்லையோ, அப்படியே தேகங்கள் நாசமடைந்தபோதிலும், எங்கும் நிறைந்த ஆத்மா நாச மடைவதில்லை. நாம் அநேகம் புஷ்பங்களை ஒரு நூலில் கோத்து மாலையாகக் கட்டுகிறோம். அவ்வெல்லாப் புஷ்பங்களிலும் நூல் இருக்கிறது. புஷ்பங்கள் நாச மடைந்தபோதிலும், நூல் நாச மடைவதில்லை. அப்படி எல்லாத் தேகங்களிலும் ஆத்மா இருக்கிறது. தேகங்கள் நாச மடைந்தபோதிலும் ஆத்மா நாச மடைவதில்லை.

அந்த ஆத்மா உடலும் அல்ல, இந்திரியங்களுமல்ல. ஏனென்றால் உடலுக்கும் இந்திரியங்களுக்கும் அழிவுண்டு. ஆத்மாவிற்கு அழிவில்லை. பிராணனும் ஆத்மாவல்ல. ஏனெனில் பிராணன்கள் அநேகம், ஆத்மா ஏகம். மனதும் ஆத்மாவல்ல. ஏனென்றால் மனம் சலம், ஆத்மா அசலம். புத்தியும், ஆத்மாவல்ல. ஏனெனில், புத்தி விகாரமடையும் ஆத்மா விகாரமடைவதில்லை. ஒரு நீல வஸ்திரத்திலாவது, இரக்த வஸ்திரத்திலாவது, படிகக்கல்லை வைத்தோமாகில், அப் படிகக்கல் நீலமாகவும் இரக்தமாகவும் தோன்றும். அது உண்மையில் நீலமும் இரக்தமுமல்ல. அப்படி ஆத்மா (1) அன்னமயகோசத்தாலும், (2) பிராணமயகோசத்தாலும், (3) மநோமய கோசத்தாலும், (4) விக்யானமயகோசத்தாலும், (5) ஆனந்தமயகோசத்தாலும், உண்டாகும் குணதோஷங்களில் சம்பந்திப்பதில்லை. பித்ததோஷத்தால் தலை சுற்றுகிறவனுக்கு பூமியே சுற்றுகிறதுபோல் தோன்றுகிறது. ஆனால் உண்மை

யில் பூமி சுற்றுகிறதில்லை. அப்படி நிர்விகாரமான ஆத்மாவும், விகாரமடைவ தில்லை.

கனவில் தோன்றும் சுகதுக்கங்கள் ஜாக்ரத்தில் எப்படி தேகத்தில் சம்பந்திப்பதில்லையோ அப்படியே ஜாக்ரத்திலுண்டாகும் சுகதுக்கங்களும் ஆத்மாவைச் சம்பந்திப்பதில்லை. நித்திரை செய்யும்பொழுது நித்திரையிலிருக்கும் தேகம் ஜாக்ரத் தேகம்போலவே தோன்றுகின்றது. ஆனால் நித்திரையில் தோன்றும் தேகம் நாசமடைந்தாலும், ஜாக்ர தேகம் நாசமடைவதில்லை. அப்படி ஜாக்ராவஸ்தையில் இருக்கும் தேகம் ஆத்மாபோல் தோன்றுகின்றது. ஜாக்ர தேகம் நாச மடைந்தபோதிலும், ஆத்மா நாசமடைவதில்லை. கனவில் காணும் சுகத்தை அனுபவிக்க எப்படி ஆசை உண்டாவதில்லையோ அப்படி சுவர்க்கத்திலிருக்கும் சுகத்தை அனுபவிக்க ஆசை உண்டாவதில்லை. கயிற்றின் ரூபத்தை யறியாதவன் கயிற்றைப் பாம்பென்றெண்ணி எப்படி பயப்படுகிறானோ அப்படி அஞ்ஞானி பிரபஞ்சத்தில் துக்கத்தை யனுபவிக்கிறான். கயிற்றைக் கயிறென்றறிந்தவன் எப்படி பயந்தோடுவதில்லையோ, அப்படி ஞானி சம்சாரதுக்கத்தை அனுபவிப்பதில்லை. ஜலத்துடன் சேர்ந்த உப்பு எப்படித் தண்ணீராய்விடுகிறதோ, அப்படியே ஆத்மாவுடன் சேர்ந்த புத்தி ஆத்மாவாகிறது. சூரியன் ஒன்றாக இருந்தபோதிலும், அநேகம் தண்ணீர்க் குடங்களில் பிரதி பிம்பித்து எப்படி அநேகமாகத் தோன்றுகிறதோ, அப்படி ஆத்மாவும் அநேக தேகங்களில் அநேகமாகத் தோன்றுகின்றது. தண்ணீரில் பிரதிபிம்பித்த சூரியன் ஆகாயத்திலிருக்கும் சூரியனைவிட எப்படி வேறாகத் தோன்றுகிறதோ அப்படி ஆத்மாவைத் தவிர வேறாக ஆபாஸம் என்ற பெயருடன் புத்தியில் பிரதிபிம்பத்த ஆத்மாவும் தோன்றுகின்றது. பிம்பமில்லாமல் தண்ணீரில் பிரதிபிம்பம் எப்படித் தோன்றாதோ, அப்படி ஆத்மாவில்லாமல் புத்தியில் சிதாபாஸம் தோன்றுகிறதில்லை. பிரதிபிம்பத்திலிருக்கும் குணதோஷங்கள் எப்படி பிம்பத்தில் சம்பந்திப்பதில்லையோ, அப்படியே சிதாபாஸனுக்கு இருக்கும் கர்த்ருத்வாதி குணங்கள் ஆத்மாவைச் சம்பந்திப்பதில்லை. தண்ணீரிலிருக்கும் குளிர்ச்சி தண்ணீரில் பிரதிபிம்பித்த சூரியனை எப்படிச் சம்பந்திப்பதில்லையோ, அப்படியே புத்தியின் குணதோஷங்கள் சிதாபாஸனைச் சம்பந்திப்பதில்லை. புத்தியின் கர்த்ருத்வம், போக்த்ருத்வம், துக்கித்வம் முதலிய குணங்களுடன் சேர்வதால், சிதாபாஸன் கர்த்தாவாகவும், போக்தாவாகவும், துக்கியாகவும் தோன்றுகின்றது. எப்படியெனில், பாத்திரத்திலிருக்கும் தண்ணீர் அசைந்தால் அதில் பிரதிபிம்பித்த சூரியனும் அசைவதுபோல, பாத்திரத்தி லிருக்கும் தண்ணீர் நாசமடைந்தால் அதிலிருக்கும் சூரியன் காணமற் போவதுபோல் புத்திலயத்தை அடைந்தபோது சிதாபாஸனும் காணமற் போய்விடுகிறது. ஆகாயத்திலிருக்கும் சூரியன், தண்ணீரிலிருக்கும் சூரியனையும், தண்ணீரையும், அலைகளையும் எப்படிப் பிரகாசிக்கச் செய்கின்றதோ அப்படி ஆத்மா சிதாபாஸனையும், புத்தியையும், புத்தியின் கர்த்ருத்வம் முதலிய குணங்களையும், பிரகாசிக்கச் செய்கின்றது. மேகத்தைப் பிரகாசிக்கச்செய்யும் சூரியன் மேகத்தால் மறைக்கப்படுகின்றது. அதுபோல அக்யானத்தைப் பிரகாசிக்கச்செய்யும் ஆத்மா, அக்யானத்தால் மறைக்கப்படுகின்றது. சூரியன் மேகம் முதலியவற்றைப் பிரகாசிக்கச் செய்வதுபோல ஆத்மா ஸ்தூல தேகத்தைப் பிரகாசிக்கச் செய்கிறது. எல்லாவஸ்துக்களையும் பிரகாசிக்கச் செய்யும் சூரியன் எப்படி அந்த வஸ்துக்களால் தோஷ மடைவதில்லையோ

அப்படி எல்லா வஸ்துக்களையும் பிரகாசிக்கச்செய்யும் ஆத்மாவும், அந்த வஸ் துக்களால் தோஷத்தை யடைவதில்லை.

கண்ணுடியில் தோன்றும் முகம் முகம் போலவே இருக்கின்றது. அது போல புத்தியிலிருக்கும் ஆபாஸனும், உண்மையான ஆத்மாவைப்போல் தோன்றுகின்றது. கண்ணுடியில் தோன்றும் முகம் நாசமடைந்தாலும், உண்மையான முகம் நாசமடைவதில்லை. அவ்வாறே, புத்தியில் தோன்றும் சிதாபாஸன் நாச மடைந்தபோதிலும், ஆத்மா நாசமடைவதில்லை. கயிற்றில் தோன்றும் பாம்பு எப்படி சத்யம் என்று தோன்றுகின்றதோ அப்படி ஆத் மாவில் தோன்றும் பிரபஞ்சமும் சத்தியம்போலிருக்கிறது. உண்மையில் பாம்பில்லாததால் எப்படி கயிறு ஒன்றுமாத்திரம் மிகுதியாகிறதோ, அப்படி உண்மையில் பிரபஞ்சம் இல்லாததால் ஆத்மாமாத்திரம் மிகுதியாகின்றது. உபாதியின் நீலநிறமும், சிவப்புநிறமும் எப்படி படிகக்கல்லில் தோன்று கிறதோ, அப்படி ஆத்மாவின்கண் இருக்கும் சத்வம் பிரபஞ்சத்தில் தோன்றுகின்றது. படிகக்கல்லில் சிவப்புநிறம் எப்படி மித்தையோ, அப் படி ஆத்மாவில் தோன்றும் பிரபஞ்சமும் மித்தையாகும். அக்யானிகள் ஜீவன் என்றும் ஈச்வரன் என்றும் பேதம் கற்பிக்கிறார்கள். உண்மையில் பேதமில்லை. தேகசம்பந்தத்தால் பரமாத்மாவிற்கு ஜீவனென்று வ்யவகாரம் ஏற்படுகிறது. தேகம் நாச மடைந்தால் ஜீவன் என்ற வ்யவகாரம் ஏது? உண்மையில் ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் பேதமென்பதில்லை. ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் பேத மில்லையென்ற ஞானம் எவனுக்கு ஏற்படுகிறதோ அவனே ஞானியாவான். பாலுடன் சேர்த்த தண்ணீரும் பாலைப்போல் காணப்படுகிறது. அப்படி ஆத்மாவின் சேர்க்கையால், அனாத்மாவும் ஆத்மா வாகத் தோன்றுகின்றது.

பாலையும் நீரையும் பகுத்தறியக்கூடியது ஹம்ஸந்தான். அப்படி ஆத்மா அநாத்மாவை பகுத்தறிபவன் சந்நியாசி ஒருவன்தான். இருட்டில் நிற்கும் ஓர் கட்டையைப் பார்த்துத் திருடன் என்று நாம் பிரமிக்கிறோம். ஆனால் திருடனுடைய குணங்கள் அக்கட்டைக்கு ஏற்படுவதில்லை. அப்படி நிர் விகாரமான ஆத்மா விகாரம் அடைவதில்லை. இருட்டிலிருக்கும் கட்டை யைக் கட்டையென்றறிந்தால் திருடன் என்ற பயமும் பிரமமும் போய்விடு கிறது. அப்படி ஸ்வஸ்வரூபத்தை அடைந்தால் பிரபஞ்சம் என்பது இல்லை. ஸ்வஸ்வரூபத்தை அடைந்தவன் மோக்ஷத்தை யடைகின்றான்.

"உன்னைக் காப்பாற்றுகிறேன்"

என்று வெகு விரைவா யுனது நாவு குழறிவிடுகிறது; ஆனால் அங்ஙனமே முடிகிறதா? அதற்குள் பல இடுக்கண் விளைந்து அச்செயல் தடுமாறிவிடின் நீ கூறிய வாசகம் பொய்தானே? ஆனதால். "கடவுள் உன்னைக் காப்பாற்றுவார், அவர் கிருபை யுளதேல் என்னாலியன்ற வுதவியைச் செய்கிறேன்" என்று கூறு. அன்போ டெதையுஞ் செய்.






(245-ம் பக்கத் தொடர்ச்சி.)

## உலகஞானம்.

(சிவானந்தசாகர யோகீஸ்வரர்.)

பெருமைக்காக அக்கினி ஹோத்திரம் செய்தல், டம்பத்துக்காக அடங்கியிருத்தல், டம்பத்துக்காக யாகம் செய்தல், டம்பத்துக்காக அத்தியயனம் செய்தல் ஆகிய இவை பயன் தரா; பயங்கரமான தீமையைத் தரும். குடியிருக்கிற வீட்டில் தீ வைக்கிறவன், விஷ மூட்டுகிறவன், மனைவியால் ஜீவிக்கிறவன், மது விற்கிறவன், அம்பு செய்கிறவன், சோதிடன், சிநேகிதர்களுக்குத் துரோகம் செய்கிறவன், விடன், கருவழிக்கிறவன், மதுபானம் பண்ணுகிறவன், குறும்பாகப் பேசுகிறவன், புண்களை அறுக்கிறவன், நாஸ்திகன், வேத தூஷகன், பரிதானம் வாங்குகிறவன், காலங் கடந்தபின் உபநயனம் செய்யப்படுகிறவன், இரகசியமாகப் பசுவதை செய்கிறவன், அடைக்கலம் புகுந்தவனைக் கொலை செய்கிறவன்—இவர்கள் எல்லாரும் பிரமஹத்தி செய்தவர்களுக்குச் சமானமானவர்கள். சொர்ணம் தீயினால் பரீட்சிக்கப்படுகிறது; மனிதன் குணத்தினால் அறியப்படுகிறான். யோக்கியன் நடக்கையினால் அறியப்படுகிறான். பயமுண்டான காலத்தில் தைரியம் அறியப்படுகிறது. மன அடக்கமுள்ளவன் தரித்திர காலத்தில் அறியப்படுகிறான். சிநேகிதர்களும் சத்துருக்களும் துக்க காலத்திலும் அபாய காலத்திலும் அறியப்படுகிறார்கள். நரை அழகை அழிக்கிறது. கவலை பொறுமையை அழிக்கிறது. மரணம் உயிரைப் போக்குகிறது. பெருமை தர்மத்தை அழிக்கிறது. கோபம் வாழ்வை அழிக்கிறது. ஈனர் உறவு நல்லொழுக்கத்தை அழிக்கிறது. காமம் மானத்தை அழிக்கிறது. கருவம் எல்லாவற்றையும் அழிக்கிறது.

சற்கருமங்களினாலேயே வாழ்வுண்டாகிறது. ஜாக்கிரதையினால் அது காப்பாற்றப்படுகிறது. சாமர்த்தியத்தினின்றும் அது உண்டாகிறது. மன அடக்கத்தினால் அது நிலை பெறுகிறது. ஞானம், உயர்ந்த வமிசம், மன அடக்கம், வேத உணர்ச்சி, சாமர்த்தியம், மௌனம், சக்தி, நன்றியறிவு ஆகிய இந்த எட்டுக் குணங்களும் உடையவனைப் பிரகாசிப்பிக்கின்றன. அரசனே! இந்த எட்டுக் குணங்களும் உண்டாவதற்கு ஓரே வழிதானுண்டு. அரசன் விசேஷித்த ஒருவனைப் பெருமைப்படுத்தினால் அந்த அரசன் தயவானது ஒருவனுக்கு இந்த எட்டுக்குணங்களையும் உண்டாக்குகின்றது. பூலோகத்திலுள்ள மனிதர்கள் சொர்க்கத்தை அடைவார்கள் என்பதற்கு இவை அறிகுறிகளாக இருக்கின்றன. இவ்வெட்டுக் குணங்களில் முதலிற் சொன்ன நான்கும் நல்லவர்களுடன் கூடவே யிருக்கின்றன. மற்றைய நான்கும் நல்லோர்களால் அனுஷ்டிக்கப்படுகின்றன. முதலிற்சொன்ன நான்கு குணங்களாவன, யாகம், கொடை, அத்தியயனம், தவம் என்பனவாம். மற்றவை தன்னடக்கம், கபடமின்மை, பரஹிம்சை செய்யாமை, விரதம் என்பனவாம்.

எவ்விடத்தில் விருத்தர்கள் இல்லையோ அது சபை யாகாது. நீதியை எடுத்துச் சொல்லாதவர்கள் விருத்தர்க ளாகமாட்டார்கள். சத்தியத்தை விட்டு விலகினது நீதி யாகமாட்டாது. வஞ்சனையுடன் கூடினது சத்திய மாகாது. சத்தியம், அழகு, வேத உணர்ச்சி, அறிவு, உயர்ந்த வமிசம், நல்ல நடக்கை, பலம், செல்வம், தைரியம், பலவற்றையும் இன்பமாகப் பேசுகிற சாமர்த்தியம் ஆகிய இந்தப் பத்தும் மோட்சத்துக்கு மூலமானவைகளாம். தார்மிகன் தருமத்தை அனுஷ்டிப்பதினாலே ஆனந்த மடைகிறான். ஆகையால் மனிதன் பாபத்தினின்றும் விலகு மார்க்கத்தையே அனுஷ்டிக்க வேண்டும். பாபம் அடிக்கடி அனுஷ்டிக்கப்பட்டால் அது அறிவை அழித்துவிடும். அந்த ஞானத்தை யிழந்தவன் அடிக்கடி பாபத்தையே செய்கிறான். அடிக்கடி தருமத்தைச் செய்தால், ஞானம் விருத்தியாகிறது. ஞானம் விருத்தியாவதனால் அவன் புண்ணிய லோகத்தை அடைகிறான். ஆகையால் மனிதன் தருமத்தை உறுதியாகச் செய்ய வேண்டும். பொறாமை யுள்ளவனும், பிறரைத் துன்பப்படுத்துகிறவனும், கொடியவனும், ஓயாமல் சண்டை யிடுகிறவனும், ஆகிய இவர்கள் நரகத்தை அடைவார்கள். பொறாமை யில்லாதவன், ஞான முள்ளவன் ஆகிய இவர்கள் எப்போதும் நல்லவைகளையே செய்வதனால் ஒரு போதும் துக்கத்தை அடைய மாட்டார்கள். இவர்கள் எங்கும் பிரகாசிக்கிறவர்களாவார்கள். ஞானமுள்ளவர்க ளிடத்திலிருந்து அறிவைப் பெற்றுக் கொள்ளுகிறவன் உண்மையாகவே புத்திமானும் படித்தவனு மாவான். அறிவுள்ளவன் தர்மார்த்தங்க ளிரண்டையும் அனுஷ்டிக்கிறவனாகையால் ஒரு போதும் துக்கத்தை அடைவதில்லை. இரவை எதனால் சுகமாய்க் கழிக்கக் கூடுமோ அதைப் பகலிலேயே செய்துகொள்ள வேண்டும். விருத்தாப்பியத்தில் எதனால் சுகமாய்ச் சீவிக்கலாமோ அதை இளமையிலேயே செய்து கொள்ள வேண்டும். பரலோகத்தில் எதனால் சுகமாய் ஜீவிக்கலாமோ அதை வாழ்நாட்களுக்குள்ளாகவே செய்து கொள்ள வேண்டும். அறிவுள்ளவன் ஜீரணமாகிற உணவைப் புகழ்கிறான். இளமை கழிந்த மனைவியும் மெச்சப் படுகிறாள். யுத்தத்தில் வெற்றி பெற்ற வீரன் புகழப்படுகிறான். சித்தி பெற்ற தவசி புகழப்படுகிறான். தீய வழியால் சம்பாதித்த பொருளாலுண்டாகுந் தீமையைத் தடுக்கவேண்டும். புலனடக்கமில்லாத சிஷ்யனைக் குரு சிட்சிக்கிறான். துஷ்டர்களை அரசன் சிட்சிக்கிறான். இரகசியமாய்ப் பாவம் செய்கிறவனை எமன் சிட்சிக்கிறான். ரிஷிகளுடைய மகிமை, மஹாத்மாக்களின் பெருமை, ஸ்திரீகளின் கொடுமை இவைகளை அறிய முடியாது. அந்தணரிடத்தில் பக்தி யுள்ளவனும், தானம் கொடுக்கிறவனும், பந்துக்களிடத்தில் நீதியாய் நடக்கிறவனும், பெருந்தன்மை யுள்ளவனுமான க்ஷத்திரியன் பூமியைப் பரிபாலிக்கத் தக்கவனாகிறான். தைரிய முள்ளவன், படிப்புள்ளவன், பிறரை இரக்ஷிப்பதை அறிந்தவன் ஆகிய இந்த மூவரும் எப்போதும் பூமியிலிருந்து சொர்ண மலரைப் பறிக்கிறார்கள். அறிவினாலே செய்யப்படுகிற கருமங்கள் உத்தமம். புஜங்களால் செய்யப்படுவது மத்திமம். தொடையால் செய்யப்படுவது அதமம். தலையால் சுமந்து செய்யப்படுவது அதமாதமம்.

இந்த விஷயத்தில் அத்திரி முனிவர் குமாரருக்கும் சாத்தியர் என்கிற தேவர்களுக்கும் நடந்ததைக் கேளும். பூர்வகாலத்தில் அத்திரி குமாரராகிய ஞான முள்ளவரும், மஹாரிஷியும், பிச்சை யெடுத்துப் புசித்தவருமான நோன்புள்ள ரிஷி, பிக்ஷைக்காக அலைந்துகொண் டிருந்தார். அவரைச்

சாத்தியர் எனகிற தேவர்கள் கண்டார்கள். அவர்கள் முனிவரை நோக்கி, "முனிவரே! நாங்கள் சாத்தியர் என்னுந் தேவர்கள். உம்மை யின்னுரென்று தெரிந்து கொள்ளச் சக்தி யற்றவர்களா யிருக்கிறோம். ஆயினும் வேத முணர்ந்து ஞானத்தை யடைந்து புலனை வென்றவரென்று அறிகிறோம். ஆதலால் அறிவு நிறைந்த சிறந்த வசனங்களால் எங்களுடன் பேசும்" என்றார்கள்.

முனிவர், "தேவர்களே! மன அடக்கத்தினலே இருதயத்திலுள்ள முடிச்சுக்களை அவிழ்த்துக், கோபத்தை ஜயித்து, சத்தியமான தருமத்தை அனுசரித்து, விருப்பு வெறுப்பில்லாமல் எல்லாவற்றையும் சமனுய்ப் பார்க்கவேண்டுமென்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். பிறருடைய குற்றத்தையாவது அபவாதத்தையாவது எடுத்துச் சொல்லக்கூடாது. சிநேகிதர்களுடன் சண்டையிடக் கூடாது. தாழ்வானவருடைய உறவை விட்டுவிட வேண்டும். கோப முள்ளவைகளும், கொடுமை யுள்ளவையுமான வசனங்களைப் பேசக் கூடாது. இழிவானதும், அகந்தை யுள்ளதுமான நடக்கையை விடவேண்டும். கொடுஞ் சொற்கள் மனிதருடைய இருதயத்தையும், மருமஸ்தானத்தையும், எலும்பையும், பிராணனையுந் தகிக்கும். ஆகையால் கொடுஞ் சொற்களைப் பேசக்கூடாது. கொடிய வசனங்களைப் பேசுகிற மனிதன் பிறருடைய உயிர்நிலையைச் சொற்களாகிய முட்களால் குத்துகிறான். அவன் நாக்கிலேயே நரகத்தை வைத்துக்கொண் டிருக்கிறான். பிறருடைய கூரிய முனையுள்ள தீப்போன்ற சொல்லம்பினல் பிளக்கப்பட்ட இருதயத்தை யுடைய அறிஞன் வருத்தத்தால் மனம் புண்பட்டவனு யிருந்தாலும் பொறுத்துக் கொண்டிருக்க வேண்டும். பொறுத்துக்கொள்ளாவிட்டால் நிந்திக்கிறவனுடைய பாபம் தன்னை வந்தடையும். நல்லவர்களைச் சேவிக்கிறவனும், கெட்டவர்களைச் சேவிக்கிறவனும், தவசிகளைச் சேவிக்கிறவனும், திருடர்களைச் சேவிக்கிறவனும், வஸ்திரம் எதில் நனைக்கப்படுகிறதோ அந்த நிறத்தையே பெறுவதுபோல அவ்வவர்களுடைய குணங்களையே பெறுவார்கள்.

நிந்தனைகளால் வருத்தப்பட்டு நிந்தித்தவனை நிந்தியாமலும், பிறரைக் கொண்டு நிந்திக்கச் செய்யாமலும், அடிக்கப்பட்டவன் அடித்தவனை அடியாமலும் பிறரைக் கொண்டு அடிக்கச் செய்யாமலும் இருக்கவேண்டும். தனக்குத் துன்பஞ் செய்தவனைக் கொஞ்சங்கூட வருத்தப்படுத்தாம லிருக்க வேண்டும். இப்படிப்பட்டவர்களுடைய நட்பைத் தேவர்களும் விரும்புவார்கள். பேசுகிறதைவிடப் பேசாமல் மௌனமாயிருப்பது நல்லதென்று சொல்லப்படுகிறது. ஏன் என்றுல் நீ பேசினுல் உண்மையையே சொல்ல வேண்டும். உண்மையா யிருந்தாலும் எது ஒவ்வத்தக்கதோ அதையே சொல்ல வேண்டும். ஒவ்வத்தக்கதா யிருந்தாலும் நீதிநிறைந்ததா யிருக்க வேண்டும். ஒரு மனிதன் எவனுடன் பழகுகிறுனே அவனைப் போலவே ஆய் விடுகிறுன், அல்லது தான் யாரை மதிக்கிறுனே அவனைப் போலாகிறுன், அல்லது தான் எப்படியிருக்க வேண்டுமென்று விரும்புகிறுனே அப்படி யாகிறுன். ஒருவன் எதைவிட்டு விலகுகிறுனே அதினின்றும் விடுபடுகிறுன். எல்லாவற்றினின்றும் விடுபடுகிறவன் ஒருபோதும் துக்கத்தை அடையான். அவன் ஒருவனை மேற்கொள்வது மில்லை, அவன் மேற்கொள்ளப்படுவது மில்லை. அவன் பிறரை ஒருபோதும் வருத்தப்படுத்தமாட்டான். பிறரை எதிர்க்கிறதுமில்லை. இகழ்ச்சி புகழ்ச்சிகளை மதிப்பது மில்லை. அவன் பிறரால் அசைக்கப்படுகிறது மில்லை, அவன் துக்கப்படுவது மில்லை, மகிழ்வது மில்லை.

எல்லாருடைய க்ஷேமங்களையும் விரும்புகிறவனும், பிறரை வருத்தாதவனும், பேச்சில் உண்மை யுள்ளவனும், நடக்கையில் வணக்க முள்ளவனும், கோபத்தை அடக்கினவனும் தன் இனத்தாருக்குள் உத்தமனென்று மதிக்கப்படுகிறவனுவான். பொய்யினுல் பிறருக்கு ஆறுதல் சொல்லாதவனும், வாக்குத்தத்தம் செய்ததைக் கொடுப்பவனும், பிறருடைய பலஹீனத்தை அறிகிறவனுமான ஒருவன் மத்திமனென்று கருதப்படுகிருன். கோபத்தை அடக்க முடியாமையும், ஆபத்தால் வருந்த ஏதுவாயிருத்தலும், கோபத்தை வெளியிடுகிறதும், நன்றி யில்லாமையும், பிறருக்குச் சினேகமாகா திருப்பதும், கெட்ட இருதய முடைமையும் ஆகிய இவைகள் கெட்ட மனிதர்களுக்கு இலக்கணமாம். பிறர் செய்த நன்மையால் திருப்தி யடையாதவனும், சந்தேகப்படுகிறவனும், உண்மையான சினேகிதர்களை விலக்குகிறவனும் கெட்ட மனிதனே யாவான். தன் க்ஷேமத்தை விரும்புகிறவன் நல்லவர்களுடன் கூடவேண்டும். தன் பலத்தாலும், சாமர்த்தியத்தாலும், புத்தியாலும், இடைவிடா முயற்சியாலும், பொருள் சம்பாதிக்கிறவன் சிரேஷ்டனுவான் என்பார்கள். ஆனுல் அவன் மத்திமனே. ஏனென்ருல், அவன் உலகில் புகழ் அடைவதுமில்லை, தருமத்தைச் செய்வது மில்லை, உயர்ந்த வமிசத்துக்குரிய நடக்கைகளைப் பெறுவது மில்லை. உயர்ந்த வமிசத்திற் பிறந்தவனுக்கு எப்போதும் தரும சிந்தையும் நல்ல எண்ணங்களும் இயல்பாகவே யுண்டாகின்றன. அவன் ஒருபோதும் தாழ்வடையான்; ஆதலால் விவாகாதி சம்பந்தங்கள் செய்ய வேண்டும். (தொடரும்)

## சற்சன சகவாசம்.

சற்சன சகவாசம் செய்வதால் வரும் நன்மைகள் பல. "கேள்வி முயல்" என்ருர் ஔவையார்; "செல்வத்துட் செல்வஞ் செவிச் செல்வ மச்செல்வஞ், செல்வத்துளெல்லாந் தலை" என்ருர் நாயனுர்; பெரியோர்களோடு உறவாடுதலால்—அவர்கள் நீதிமொழி கேட் டதன்படி யொழுகுதலால், அநுபவமும், புத்தியும், ஆசாரமும், அன்பும், ஆநந்தமும் அடுக்கடுக்காய் வளரும். துற்சன சகவாசமோ சீக்கிரம் உற்சாகத்தைத் தரத்தக்க பல டம்பங்கள் தோன்றி அற்ப சந்தோஷத்தை ஈந்து மிக்க இடுக்கண் விளைக்கும்; கடற்கரையில் உலாவ ஏன் செல்கிறேம்? சுத்தமான காற்றை யுபயோகிக்க வன்றே? அங்கு மீன் முதலிய அழுகிய பதார்த்தங்களா லியங்கும் விஷவாயுவைச் சுவாசிப்போமா? இல்லை. ஆதலின் சற்சன சபையென்று தோன்றிய குழாத்தில் துற்சனரின் தோரணை யாதேனும் நிகழின் உடனே யகற்ற முயலுக; அன்றேல் விலகுக.




## நல்ல லாபமுள்ள நார்த்தொழில்.

(உறையூர். ஸ்ரீ. வே. வரதராஜய்யங்கார் எழுதியது)

**முன்னுரை.** மிக்க உறுதியும் பட்டு நூலைப்போன்ற பளபளப்பும், மென்மையுமுள்ள நார் அடர்ந்த செடிகள் அநேகமாக நமது நாட்டின் எல்லாப் பாகங்களிலும் அதிகமாகப் பயிராகின்றன. அவற்றுள் பல, காடுகளில் ஏராளமாக அடர்ந்து பரவிச் செழிப்பாக வளருகின்றன. நாருள்ள சில செடி வகைகளைத் தொழிலாளர்கள் வணிக நிமித்தமாகத் தக்கபடி தேவையான அளவு அடைதற்பொருட்டு பயிராக்கியும் வருகிறார்கள். பொதுவாக, மெத்தை முதலியவற்றிற்கும் கயிறு திரித்தல்போன்ற கைத்தொழிலுக்கும் அனைவராலும் உபயோகப்படுத்தப்படுகின்ற நாரை, ரசாயன சக்தியால் மிக்க மிருதுவானதாகவும் பட்டையொத்த மினுமினுப்புடையதாகவுமாக்கி, அத்தொழிலை விருத்தி செய்யலாம். நார்த்தொழிலைப் பற்றி யான் இங்கு விரிவாக எழுத வந்ததன் நோக்கம் சொற்ப மூலதன முடையவர்களும் பின்வரும் முறைகளைக் கைக்கொண்டு தக்கலாப மடைவதுடன், நமது நாட்டின் தொன்மையான இக் கைத்தொழிலைப் புதுக்கி நலமடையவேண்டு மென்பதற்கேயாம்.

### 1 கற்றாழை (Aloes or Agave).

நமது தேசத்தில் எங்கு பார்த்தாலும் நார் மலிந்த கற்றாழைகள் நிறைந்திருக்கின்றன. பயிரும் செய்யப்படுகின்றன. இதன் சிலவகைகள் அமெரிக்கா தேசத்திலிருந்து இங்கு கொண்டுவந்து விருத்தியாக்கப் பெறுகின்றன. நாட்டுப் புறங்களிலும் பிறவிடங்களிலும் நீர் இறைக்குங் கயிறும் கால்நடைகளைத் தறிகளிற் பிணிக்குங் கயிறும் பெரும்பாலும் கற்றாழை நாரால் ஆக்கப்பட்டவையே. சாதாரணமாக இவை வேலி யமைப்பதற்கெனப் பயிராக்கப்படும். இவை எல்லா இடங்களிலும் வளருந் தன்மையன. இக் கற்றாழைக்குத் தண்ணீர் பாய்ச்ச வேண்டிய அவசியமே இல்லை. இவற்றின் வேருக்குச் சமீபத்தில் முளைத்திருக்கும் முளைகளில் ஒன்றை எடுத்து மறுபடியும் நட்டால் பலவாகப் பெருகி வளரும். நாருக்காகவே பல இடங்களில் இவை பயிராக்கப்படுகின்றன. இவற்றின் நெடிய மடல்களிலிருந்து வேக்காட்டு முறைப்படி நார் உரிக்கப்படுகின்றது. இவ்வித நார்களுக்கு ஐரோப்பாவில் தேவை யதிகம்; மேலும், இங்கிலாந்து, பிரான்சு, ஜர்மனி தேசங்களில் இவற்றிற்குத் தக்க விலை யுண்டு.

**வேக்காட்டு முறை.** இக் கற்றாழையின் மடல்களைத் தேர்ந்தெடுத்து, அவைகளின் பக்கங்களிலும் ஓரங்களிலுமுள்ள முட்களை அரிவாளால் போக்கி,

இருபது முப்பதாகச் சேர்த்துக்கட்டி, தண்ணீரில் போட்டுவிட வேண்டும். அக்கட்டுகள் மிதக்காவண்ணம் அவற்றின்மீது பெருங்கற்களைப் பாரமாக வைத்தல் அவசியம். இதில் வேக்காடாவது—சூரிய வெப்பம் படுதலும், தண்ணீரில் நன்றாய் அழுகுதலுமே யாகும். அவை ஜலத்தில் நன்றாய் அழுகிப் பதப்பட ஒருமாத காலத்திற்கு மேலாகும். அதன்பின், அவற்றை வெளியே எடுத்துத் தண்ணீரில் அடிக்கடி தோய்த்துக்கொண்டு நல்ல பாறையில் துவைக்க வேண்டும். அப்பொழுது நாரின்மீதுள்ள சதையான பாகம் நீங்கும்; அது நீக்கப்பட்டவுடன் காணப்படும் நார், சலவை செய்த சுரசுரப்பான பட்டைப்போலிருக்கும். இளம் மடல்களினின்றும் எடுக்கப்படும் நார், நன்றாக விளைந்த மடல்களிலிருந்து கொள்ளப்படுவதைக் காட்டிலும் வெண்மை நிறமுடையதாயும் மெதுவாகவு மிருக்கும்.

**சத்தும் உறுதியும்.** இவ்வித நார் தண்ணீர் ஊடுருவக்கூடாத தன்மையதாதலின், எப்போதும் ஜலத்திலேயே நனைந்தவாறு உபயோகப்படும் வேலைகளுக்கு மிக்க பயனுள்ளதல்ல. அங்ஙனம், தண்ணீரில் அடிக்கடி தோய்க்கப்படாத உபயோகங்களுக்கு இவ்வித நார்களால் செய்யப்பெற்ற வஸ்துக்களை வைத்துக் கொண்டால் அவை உறுதியாய் வெகுகால மிருக்கும். இதைத்தவிர இக்கற்றாழை நார் வகைக்கு வேறு எவ்விதக் குறைபாடு மில்லை. மிக்க நீளமான நார் வர்க்கங்களுடன் இது ஒன்றுவதோடு சுத்த வெண்ணிறம் பொருந்தியதா யிருப்பதுதான் இதன் விசேஷம்.

**பதப்படுத்தும் விதம்.** சில ரசாயனப் பொருள்களினுதவியால் இக்கற்றாழை நாரைப் பதப்படுத்தின் பட்டிற்குரிய பளபளப்பும், வளையுந் தன்மையும், பிரகாசமும் ஏற்படுவதுடன் தறிக்குத்தக்கதாகவு மாக்கலாம். அதிக சக்தியில்லாத சங்கத்திராவகத்தோடு (Hydrochloric acid) சமபாகம் நல்லெண்ணெயைக்கூட்டி, அதில் இந்நாரை நனைத்தால் நன்கு பதப்படும். பட்டின் நயமும் உறுதியும் பிறவும் கற்றாழை நாருக்கு ஏற்பட மேற்குறித்த கலவையில் சுமார் பதினைந்து நிமிஷங்கள் வைத்திருந்து எடுத்துப் பிறகு தனி நல்லெண்ணெயில் பதினைந்து நிமிஷநேரம் மூழ்கவைத்து, பின் *சுவர்க்கார திராவகத்தில் (Soap Solution) அரைமணி நேரம் ஊறவைத்து, மறுபடியும் சுத்த ஜலத்தில் அரைமணி நேரம் இட்டுவைக்க வேண்டும். இம்முறைகளனைத்தையும் சரிவர அனுஷ்டித்தபின், அக்கற்றாழை நாரினைக் கொண்டு நெசவு செய்யப்படும் ஆடை பட்டிற்குள்ள வனப்புக்களனைத்தையும் நிச்சயமாக அடைந்திருக்கும். இப்படி தறிக்குத் தேர்ந்தெடுக்கப்படும் கற்றாழை மடல்கள் மத்திம விளைவை யடைந்திருக்க வேண்டும்; மிகவும் கொழுந்தாயிருப்பதும் பயன்படாது.

---

* ஒருபவுண்டு சுவர்க்காரத்திற்கு ஒரு 'காலன்' தண்ணீர் வீதம் சேர்க்கப்பட வேண்டும். சுவர்க்காரத்திற்கு பதிலாக பூந்திக்கொட்டையையும் உபயோகிக்கலாம்.

**நேசவு.** இக்கற்ருழையைப் பருத்தியைப்போலவே நெசவுத்தொழிலிற் கொள்ளுதலொக்கும். வேக்காட்டு முறையில் சுத்தப்பட்டு நல்ல பதமுடைய தாகிவிடுவதால் தனியாக நூலைப்போன்று இதைச் சலவை செய்ய வேண்டிய அவசியமுமில்லை.

## 2. தேன்னை நார் (கதம்பை).

தென்னை உரிமட்டையிலிருந்து எடுக்கப்படும் நார் மிக்க உறுதியுடையது. நல்ல காய்ந்த மட்டைகளினின்றும் எடுக்கப்படும் முரடான நார், மெத்தை, சோபா முதலியவற்றி லடைக்கமட்டுமே பயன்படும். சிறிது சுர சுரப்பான நாரைக்கொண்டு முரட்டுக்கயிறுகள் திரிக்கப்படுகின்றன.

**பதப்படுத்தும் விதம்.** முன் கற்ருழை ஊறவைக்கும் முறைப்படியே, உரித்த மட்டைகளைத் தண்ணீரில் மூன்றுமாத காலத்திற்குமேல் ஊறப் போட்டுவிட வேண்டும். அப்பால் நன்ருயழுகிய அவ்வுரி மட்டைகளை யெடுத்துக் கொட்டாப்புளிகொண்டு அடித்துப் பிதிர்ந்த பாகங்களைப் போக்கி விட்டு, நாரைமட்டும் தனியே எடுக்கவேண்டும். அந்நார் பழுப்பும் சிவப்புங் கலந்த ஒருவித நிறமுடையதா யிருக்கும். அதைச் சாமானியமாகச் சலவை செய்ய முடியாது.

**சலவை.** தென்னை நாரை வண்ணார் துணியைச் சலவை செய்யும் முறைப்படி சுத்தி செய்யலாம். சுண்ணும்பையும் உவர் மண்ணையும் ஓர் பாத்திரத்தில் நன்ருகத் தண்ணீரில் கரைத்து, அதில் இந்நாரை இட்டு அலசி எடுத்துப் பிழிந்துவிட வேண்டும். பிறகு நன்ருக வண்ணார் முறைப்படி வேக்காட்டில்வைத்து, மூன்றுமணி நேரத்திற்குப்பின் னெடுத்து, தண்ணீரில் நன்ருக அலசிக்கழுவிஞல் அந்நார் சுத்த வெண்மை நிறத்தை எய்தும். இதைக்கொண்டு தொப்பி(Hat)முதலான உயர்ந்த சாமான்களைச் செய்யலாம்.

**உபயோகங்கள்.** இந்தத் தென்னைநார் எந்தக்காலத்திலும், எந்தச் சீதோஷ்ண பேதமுள்ள தேசத்திலும் உறுதி யுடையதாயும் நீடித்த காலம் உழைப்பதாயு மிருக்கும். எவ்வளவு ஈரமுள்ள இடமாயிருப்பினுஞ் சரி, சமுத்திர ஜலத்திலுங்கூட இது மிக்க பலமுள்ளதா யிருக்கிறது. தென்னை நாரினைக் கொண்டு தேர்வடங்கள் செய்யப்படுவதினின்றுமே இதன் வலிமை உய்த்துணரப்படும். கப்பல் கட்டும் வேலைக்கும் முற்றிலும் இதையே உப யோகிக்கிருர்கள். மற்றும், கப்பல் சம்பந்தப்பட்ட எல்லா வேலைகளுக்கும் இது பயன்படுகின்றது. இந்நாரினை மிருதுவாக்கிப் பாய்கள் நெய்வார்கள். அப்பாய்கள் நூற்றுக்கணக்கான ஆண்டுகள் சேதப்படாம லிருக்கின்றன. மிருதுவான தென்னை நாரை அடைத்து மெத்தை தைப்பதுண்டு; அப்படிச் செய்வது தேகசுகத்திற்கு அனுகூலமான தாகும். மேலும், பலரகமுள்ள "ப்ரஷ்கள்" (Brushes) இத்தென்னை நாரைக்கொண்டு உற்பத்தி செய்யப் படுகின்றன. இவையன்றித் தண்ணீர் இறைக்குங் கயிருகவும், மாடு கன்று களைக் கட்டுந்தும்பாகவும், பின்னும் எத்தனையோ அத்யாவஸ்யமான காரி யங்களுக்கும் இந்த நாரே பயன் படுத்தப்படுகின்றது. (தொடரும்)

---

**சந்தாதாரர்களுக்கு:**—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாதமாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிருேம்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அருட்பெருஞ்ஜோதி அற்புதப் பத்திரிகை.

(சிதம்பரம். இராமலிங்க சுவாமிகள்.)

**உலகத்தினிடத்தே பெறுதற்கு அருமையாகிய**
**மனித தேகத்தைப் பெற்ற நண்பர்களே,**

அறிவுவந்த காலமுதல் அறிந்தறியாத அற்புத அறிவுகளையும் அடைந்தறியாத அற்புத குணங்களையும் கேட்டறியாத அற்புதக் கேள்விகளையும் செய்தறியாத அற்புதச் செயல்களையும் கண்டறியாத அற்புதக் காட்சிகளையும் அனுபவித் தறியாத அற்புத அனுபவங்களையும் இது தருணந்தொடங்கிக் கிடைக்கப் பெறுகின்றேனென் றுணருகின்ற ஓர் சத்திய வுணர்ச்சியாற் பெருங் களிப் புடையேனாகி இருக்கின்றேன்.

நீவிர்களும் அவ்வாறு பெற்றுப் பெருங்களிப்பு அடைதல் வேண்டு மென்று எனக்குள்ளே நின்று நிறைந்து எழுந்து வெளிப்பட்ட எனது சுத்த சன்மார்க்க லக்ஷியமாகிய ஆன்மநேய ஒருமைப் பாட்டுரிமைப் பேராசை பற்றியே இதனைத் தெரிவிக்கின்றேன்.

இயற்கையிற்றானே விளங்குகின்றவரா யுள்ளவரென்றும், இயற்கையிற் றானே யுள்ளவராய் விளங்குகின்றவரென்றும், இரண்டுபடாத பூரண இன்ப மானவரென்றும், எல்லா அண்டங்களையும், எல்லா வுலகங்களையும், எல்லாப் பதங்களையும், எல்லாச் சத்திகளையும், எல்லாச் சத்தர்களையும், எல்லாக் கலை களையும், எல்லாப் பொருள்களையும், எல்லாத் தத்துவங்களையும், எல்லாத் தத்துவிகளையும், எல்லா வுயிர்களையும், எல்லாச் செயல்களையும், எல்லா இச்சை களையும், எல்லா ஞானங்களையும், எல்லாப் பயன்களையும், எல்லா அனுபவங் களையும், மற்றெல்லாவற்றையும் தமது 'திருவருட் சத்தியால்' தோற்றுவித்தல், வாழ்வித்தல், குற்றம் நீக்குவித்தல், பக்குவம் வருவித்தல், விளக்கஞ் செய் வித்தல், முதலிய பெருங்கருணைப் பெருந்தொழில்களை இயற்றுவிக்கின்றவ ரென்றும், எல்லா மானவரென்றும், ஒன்றுமல்லாதவ ரென்றும், சர்வ காருணிய ரென்றும், சர்வ வல்லபரென்றும், எல்லாம் உடையராய்த் தமக்கு ஒருவாற்றானும் ஒப்புயர்வில்லாத் தனிப்பெருந் தலைமை, அருட்பெருஞ் ஜோதிய ரென்றும், சத்திய அறிவால் அறியப்படுகின்ற 'உண்மைக் கடவுள் ஒருவரே' அகம்புற முதலிய எவ்விடத்தும் நீக்கமின்றி நிறைந்த சுத்த மெய் யறிவென்னும் பூரணப் பொது வெளியில் அறிவாரறியும் வண்ணங்களெல் லாமாகி விளங்குகின்றார்.

அவ்வாறு விளங்குகின்ற ஒருவரேயாகிய கடவுளை இவ்வுலகினிடத்தே ஜீவர்கள் அறிந்து அன்பு செய்து அருளை யடைந்து அழிவில்லாத சத்திய சுக பூரணப் பெருவாழ்வைப் பெற்று வாழாமல், பலவேறு கற்பனைகளால், பல

வேறு சமயங்களிலும், பலவேறு மதங்களிலும், பலவேறு மார்க்கங்களிலும், பலவேறு லக்ஷியங்களைக்கொண்டு நெடுங்காலமும், பிறந்து பிறந்து அவத்தை வசத்தர்களாகிச் சிற்றறிவுமின்றி விரைந்து விரைந்து பலவேறு ஆபத்துக்களினால் துன்பத்தில் அழுந்தி இறந்திறந்து வீண் போகின்றார்கள்.

இனி இச்சீவர்கள் விரைந்து விரைந்து இறந்து இறந்து வீண் போகாமல் உண்மை யறிவு, உண்மை யன்பு, உண்மை யிரக்கம் முதலிய சுபகுணங்களைப் பெற்று நற்செய்கை யுடையராய் எல்லாச் சமயங்களுக்கும் எல்லா மதங்களுக்கும் எல்லா மார்க்கங்களுக்கும் உண்மைப் பொது நெறியாகி விளங்குஞ் சுத்த சன்மார்க்கத்தைப் பெற்றுப் பேரின்ப சித்திப் பெருவாழ்வில் பெருஞ் சுகத்தையும் பெருங் களிப்பையு மடைந்து வாழும் பொருட்டு மேற்குறித்த உண்மைக் கடவுள் தாமே திருவுள்ளங் கொண்டு சுத்த சன் மார்க்கத்தின் முக்கிய லக்ஷியமாகிய உண்மை விளக்கஞ் செய்கின்ற ஓர் ஞான சபையை இங்கே தமது திருவருட் சம்மதத்தால் இயற்றுவித்து 'இக்காலந் தொடங்கி யளவு குறிக்கப்படாத நெடுங்காலம், அளவு குறிக்கப்படாத அற்புத சித்திகளெல்லாம் விளங்க யாமே அமர்ந்து விளையாடுகின்றோம்' என்னும் திருக்குறிப்பை வெளிப்படுத்தி அருட்பெருஞ் ஜோதியராய் வீற்றிருக்கின்றார்.

ஆகலின் அடியிற்குறித்த தருணந்தொடங்கி வந்துவந்து தரிசிக்கப் பெறுவீர்களாயிற் கருதிய வண்ணம் பெற்றுக் களிப்படைவது மன்றி இறந்தவர் உயிர்பெற்றெழுதல், மூப்பினர் இளமையைப் பெற்று நிற்றல் முதலிய பலவகை அற்புதங்களைக் கண்டு பெருங்களிப்பும் அடைவீர்கள்.

தென்னார்க்காடு ஜில்லா, வடலூர். — சிதம்பரம்-இராமலிங்கம். 1872-ஞ

---

**குறிப்பு:**—இஃது வடலூர் பார்வதிபுரம் தேவ தர்மஸ்தான டிரஸ்டி ஸ்ரீ உ. ப. பாலசுப்பிரமணிய சிவாச்சாரியரவர்களால் பிரதி செய்தனுப்பப் பட்டது. அவர்கட்கு எமது நன்றி உரியதாக. ப-ர்.

### பொதுப் பொருட்களைப் பாவிப்பதெப்படி?

நீ ஒரு பொதுஜன நிர்வாக சபையில், தலைமை அதிகாரியாய்—காரியதரிசியாய் அச்சபையின் ஆதரவிலமர்கிறாய்; அப்போதே ஒரு புது மனிதனாக மாறிவிடாமல், எங்ஙனம் உனது சொந்தச் செல்வம் விருத்தியடைய ஆசிப்பாயோ அங்ஙனமே பொதுநலப் பிரியனாய் அச்சபையின் முக்யாம்சங்களில் கவனம் செலுத்தி பலவகையிலும் அபிவிர்த்தி செய்யவேண்டும்; உன் சொந்தப் பொருள்போல் அதனை யனுபவிக்க ஆட்சிசெலுத்த அதில் உனது கௌரவத்தைக் காண்பிக்க அதிகாரமில்லை. முதலிற் கூறிய கருத்துடையோரே மேதாவிகளென மதிக்கப்பட்டு அவர்களே எப்பொழுதும் தலைவராயிருக்கப் பொது ஜனங்கள் அபிப்பிராயப்படுவார்கள்.

## கணித சாஸ்திரப் பதங்கள்.

(எஸ். சிவராமன், பி.ஏ., எல்.டி., சேலம் காலேஜ்.)

**ப**ள்ளிக்கூடங்களில் ஆரம்ப கணித பாடத்தை ஆறுவது பாரம் முடிய தாய்ப் பாஷையாகிய தமிழிலேயே சொல்லிக் கொடுக்க முடியுமாறு ஆரம்ப கணிதசாஸ்திர விசேஷ பதங்களுக்குப் பிரதி பதங்கள் தமிழ் மொழியிலிருந்தும் முடியாதவிடத்து அல்லது நன்றாய் ஏற்காதவிடத்து ஸம்ஸ்க்ருத மொழியிலிருந்தும் தெரிந்தெடுத்துக் கீழே எழுதி யிருக்கிறேன். அவற்றைத் தமிழபிமானிகள் ஆராய்ந்து கொடுக்கப்பட்ட பிரதி பதங்களைக் காட்டிலும் சிறந்த பதங்கள் உண்டாக்கக் கூடுமானால் அவற்றைத் தெரிவிக்குமாறு கோருகிறேன். தமிழில் நூதன சாஸ்திரங்கள் பரவ எவ்லோரும் ஒப்புக் கொண்ட பதங்கள் அவசியமாதலின் படித்தவர் ஊக்கம் செலுத்துமாறு வேண்டுகிறேன்.

Elementary Mathematics—ஆரம்ப கணிதம், ஆதார கணிதம், பிரதம கணிதம்.

Arithmetic—அங்க கணிதம்.

### THE FOUR RULES—
### நான்கு விதிகள்.

Number—எண்.

Digit—இலக்கம்.

Intrinsic value—சுய மதிப்பு.

Place value—ஸ்தான மதிப்பு.

Abstract number—மானஸிக எண்.

Concrete Quantity—ஸ்தூல அளவு, ஸ்தூல ராசி.

Unit—ஒன்று, ஒற்றை, மாத்திரை.

Addition—கூட்டல்.

Subtraction—கழித்தல்.

Complementary addition — பூர்த்தி செய்கிற கூட்டல்.

Multiplication—பெருக்கல்.

Carrying figure—மேல் சேரிலக்கம்.

Product—பெருக்குத தொகை.

Continued product — தொடர்ந்த பெருக்குத்தொகை.

Partial product — பாக பெருக்குத் தொகை.

Factor—காரண எண்.

Verification—சரி பார்த்தல்.

Checking—பரிசோதித்தல்.

Division—வகுத்தல்.

Formula — ஸூத்ரம், சமிக்கை ரூபம்.

Proof—நிரூபணம். Prove—நிரூபி.

Test—சோதி, சோதனை.

Experiment—பரீட்சி, பரீட்சை.

### COMPOUND QUANTITIES—
### பலவின அளவுகள்

Simple quantity—ஓரின அளவு.

Money—பணம்.

Length—நீளம்.

Weight—நிறை, எடை.

Volume—கன அளவு, பருமன்.

Capacity—பிடித்தல் அளவு, முகத்தல் அளவு.

### GENERALISED ARITHMETIC-
### பொது எண் கணிதம், சமிக்கைக் கணிதம்.

Algebra—பீஜ கணிதம்.

Sign—குறி.

Symbol—சமிக்கை.

Expression—சமிக்கைச் சேர்க்கை, மொழி.

Term—அங்கம்.

Like—ஓரின, இன.

Unlike—வேறின.

Power—வர்க்கம்.

Index—வர்க்கக் குறி.

Degree (of an expression)—படி.

Square—சதுரம்.
Cube—கனம்.
Co-efficient—குணங்கம்.
Magnitude—பரிமாணம்.
Character—தன்மை, குணம்.
Positive—தன, ஆதாய.
Negative—ருண, விரய.
Illustration—(உதாரண) விளக்கம்.
Illustrate — (உதாரணத்தால்) விளக்கு.
Graphical Illustration—பட விளக்கம்.
Absolute value — நிபந்தனை யற்ற மதிப்பு, ஸ்வதந்திர மதிப்பு.
Brackets — அடைப்புக் குறிகள், அடைப்புகள்.
Operation—செய்கை, கிரியை.
Equation—சமீகரணம்.
Identity—அபேதம்.
Simple equation — தனிச் சமீகரணம்.
Simultaneous equations — கூட்டுச் சமீகரணங்கள்.
Solve—அவிழ், விடுவி.
Side—பக்கம்.
Satisfy—திருப்திப்படுத்து.
Unknown number—தெரியா எண்.
Root—மூலம்.
Axiom—தெளிவுண்மை.
Transpose—பக்கம் மாற்று.
Application—பிரயோகம்.
Indentical—அபேத.
Inconsistent — ஒவ்வாத, முரண்படும்.
Function—காரியம் (from 'functus', to perform).

MEASURES AND MULTIPLES-
**அளவுகளும் மடங்குகளும்.**

Prime number—பகா எண்.
Composite number—பகு எண்.
Square root—சதுர மூலம்.
Cube root—கன மூலம்.
Root—மூலம்.
Highest common measure or factor—உயர்ந்த / உத்தம பொது அளவு அல்லது காரணம்.
Lowest common multiple—தாழ்ந்த / அதம பொது மடங்கு.

FRACTIONS—
**பின்னங்கள்.**

Integer—முழு எண்.
Denominator—பகுதி.
Numerator—தொகுதி.
Term—உறுப்பு, அங்கம்.
Vulgar fraction — சாதாரண பின்னம்.
Lowest terms—தாழ்ந்த / அதம உறுப்புகள்.
Proper fraction—தகு பின்னம்.
Improper fraction—தகா பின்னம்.
Mixed number—கலப்பெண்.
Least common denominator—தாழ்ந்த பொதுப் பகுதி.
Compound fraction—கூட்டுப் பின்னம்.
Simple fraction—தனி பின்னம்.
Reciprocal — மாறுனது, தலைகீழானது.
Complex fraction—சிக்குள்ள பின்னம்.

PRACTICE—
**வாடிக்கை முறை.**

Aliquot part — சரியாய் வகுக்கும் பாகம்.
Unitary method—ஒன்றைத் தழுவிய முறை.

DECIMALS—
**தசாம்சங்கள்**

Decimal point—தசாம்சப் புள்ளி.
Standard form—கிரம ரூபம்.
Recurring decimal — திரும்பும் தசாம்சம்.
Recurring period—திரும்பும் பகுதி.

Decimal approximations — தசாம்ச சுமார் வழிகள்.

Significant figures—பொருட்படுகிற இலக்கங்கள், சார்த்தக இலக்கங்கள்.

Non-significant figures — பொருட் படாத இலக்கங்கள், நிரர்த்தக இலக்கங்கள்.

Absolute error — நிபந்தனை யற்ற பிழை, ஸ்வதந்திர பிழை.

Relative error—ஒப்பிட்ட பிழை.

Percentage error — நூற்று வீதப் பிழை.

Contracted methods—சுருக்கு வழிகள்.

Approximate data — சுமாராய்த் தந்தவை.

Limits of errors—பிழைகளின் எல்லைகள்.

Maximum—உத்தமம்.

Minimum—அதமம்.

Average—சராசரி.

SQUARE ROOT—

**சதுர மூலம்.**

Perfect square—பூர்ண சதுரம்.

Surd or irrational number—விமூல எண்.

Incommensurable number — அளவு படா எண்.

AREA—

**பரப்பளவு, பரப்பு, விஸ்தீரணம்.**

Surface—பரப்பு.

Plane—நேர் பரப்பு.

Rectangle — நீள் சதுரம், நீண்ட சதுரம்.

Dimensions—அளவுகள்.

Ring—வளையம்.

VOLUME—

**கன அளவு, பருமன்.**

Cubic measure—கன அளவு.

Rectangular solid — நேர்கோண திடம்.

Cube—கனம்.

Cuboid—நீள் கனம்.

Cylinder—உருளை.

Curved surface—வளைவு பரப்பு.

Ends—முடிவுகள்.

Cross-section—குறுக்குப் பிளப்பு.

Axis—அக்ஷக் கோடு, அக்ஷம்.

Right cylinder—நேர் உருளை.

Hollow cylinder—குழிவான உருளை.

Prism—பட்டகம்.

Lateral surface—பக்கப் பரப்பு.

Pyramid—சிகரி.

Cone—ஸ்தூபி.

Sphere—கோளம்.

## காறி யுமிழ்தல்.

இயற்கையாகவே மனிதர்க்கு ஏற்படும் செயல் என்றாலும் சற்குணப் பெரியோர்களைக்கண்டு அவர்கள்மீதுள்ள துவேஷத்தால், இழிவுபடுத்தக்கருதி அப்போதுதான் இறுமி—காறியுமிழ்வதுபோல் பாசாங்குசெய்து "ஆற்றில் குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்" பவனின் அறிவுக்கு நிகராய் உடனே வெற்றியடைந்துவிட்டதா யெண்ணித் தம்மனதை—குணத்தை—செயலை யசுத்தம் செய்துகொள்ளும் அறிவுடையார் பலருளர்; இதனுல் அப்பெரியார்கட் கெட்டுணையும் குறைநேருமோ? இல்லை, இல்லை; ஒருகாலுமில்லை. சூரியனைக்கண்டு சுணங்கன் குரைத்தால் சோதி மாறுமா?






## வேதாந்த சார சங்கிரக வசனம்.

(261-ம் பக்கத் தொடர்ச்சி.)

(தமிழ்ப்பண்டிதர். பூ. ஸ்ரீநிவாசன்)

இந்திரியாத்ம வாதியைப் பிராணாத்ம வாதியாகிய மற்றொரு மூடன் கண்டிக்கிறான்.

விறகு முதலியவற்றை வெட்டுதற்குக் கோடரி கருவியா யிருத்தல் போலப் பதார்த்தங்களை யறிதற்கு இந்திரியங்கள் கருவியாயிருக்கின்றன. ஓர் தொழிலைச் செய்வதற்குச் சாதனமாயுள்ள கருவிக்குச் சேதனத் தன்மையில்லாமைபோல இந்திரியங்களுக்கும் சேதனத்தன்மையில்லை. இந்திரியங்களின் அதிதேவதைகள் விவாதமிட்டதாகச் சொல்லவந்த சுருதி அவ்வதிதேவதைகளின் காரியத்தை உபசாரமாக இந்திரியங்களின் மீதேற்றிக் கூறிற்றேயன்றி இந்திரியங்கள் விவாதமிட்டதாக விளம்பிற்றில்லை. ஆதலால் இந்திரியங்கள் சேதனங்களன்று. அன்றாகவே ஆத்மாவு மன்றாம்.

அசேதனமாகிய விளக்கு முதலியவை வஸ்துக்களைப் பிரகாசிக்கச் செய்யுந் தன்மையுடையவையா யிருத்தல்போல, அசேதனமாகிய கண் முதலிய இந்திரியங்களும் பதார்த்தங்களைப் பிரகாசிக்கச் செய்யுந்தன்மை யுடையனவா யிருக்கின்றன. இங்ஙனம் பதார்த்தங்களைப் பிரகாசிப்பிக்கும் தன்மை பெற்றிருத்தலாலேயே அவை சேதனமாகா. சேதனமாகாமையின் ஆத்மாவாதலு மின்றாம்.

பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என்னும் பெயர்களோடு ஐந்திடங்களி லுள்ளதாகிய பிராணனே இந்திரியங்களைச் சலிக்கச் செய்கின்றது. சாக்கிரம் சொப்பனம், சுழுத்தி என்னும் மூவவத்தைகளினும் நீங்காமல் சலித்துக்கொண்டிருப்பது பிராணனே. ஆகலின் அந்தப் பிராணனே ஆத்மாவென்று சொல்லத்தக்கதாம். 'நான் பசியுடையவனா யிருக்கிறேன்', 'நான் தாகமுடையவனா யிருக்கிறேன்' என்பனபோன்ற அனுபவத்தினாலும் பிராணனே ஆத்மாவென்பது பெறப்படுகின்றது. (பசி தாகம் முதலியன பிராணனது தர்மங்களாம்.) சுருதியும் பிராணனே ஆத்மாவெனக் கூறுகின்றது. (பிராணனே ஆத்மாவென்பது ஹிரணய கர்ப்பவுபாசகர் மதம்.)

### மன ஆத்ம வாதம்.

பிராணன் ஆத்மா வென்போனை மற்றொருவன் கண்டிக்கிறான்.

பிராணன் வாயுவா யிருத்தலால் அஃது எவ்வாறு ஆத்மா வாகும்? துருத்திக் காற்றுப்போல பிராண வாயுவானது வெளியே போவதும் வருவதுமா யிருக்கின்றது. நன்மையை யேனும் தீமையை யேனும் வேறு பொருள்களை யேனும் அது அறிவதில்லை. மேலும் அது (பிராணன்) அசேதனமானது. சலிக்குந் தன்மையது. ஆத்மாவின் காரியத்தைச் செய்துகொண்டிருப்பது. மனம் நித்திராவத்தையை யடைந்திருக்கையில் பிராணவாயு விருப்பினும் தோன்றுவதில்லை. மனமே எல்லா ஞானங்களுக்கும்

காரணமா யிருப்பதாகும். அதுவே எல்லாவற்றையும் அறிகின்றது. ஆதலின் மனமே ஆத்மாவாகும். 'நான் சங்கற்ப முடையவன்', 'நான் சிந்தையுடையவன்', 'நான் விகற்ப முடையவன்' என்னு மனுபவம் ஒவ்வொருவருக்கும் இருத்தலாலும், சுருதியும் 'ஆத்மா மனோரூபன்' எனக் கூறுதலானும் மனமே ஆத்மாவாம். (சங்கற்ப விகற்பங்கள் மனத்தின் தர்மங்களாம்.) (இது நாரத பாஞ்சராத்திரத்தை யனுசரித்தவர்கள் மதம்.

## புத்தி யாத்ம வாதம்

புத்தி யாத்மவாதி இவ்வாறு கூறுகின்றனன்.

கண் முதலியவற்றைப்போல மனமும் ஓரிந்திரிய மாகும். அதனால் அது கரணமாம். அங்ஙனமாக அது ஆத்மாவாதல் எங்ஙனம் பொருந்தும்? அது ஒரு கர்த்தாவினால் ஓர் காரியத்தில் பிரவிர்த்திக்குமே யன்றி தானாகப் பிரவிர்த்திக்கக் கூடியதாகாது. எந்தக் கர்த்தா இந்திரியங்களை அல்லது கரணங்களைக் காரியத்தில் பிரவிர்த்திக்கச் செய்கின்றவனோ அவனே ஆத்மத் தன்மைக்குத் தகுந்தவனாவன். அவன் (ஆத்மா) சுவதந்திரனாயும் புருஷனாயுமிருத்தலால் எப்பொழுதும் பிறரால் நடத்தப்படுபவ னாகான். ஆதலால் அவ்வாறிருப்பதாகிய புத்தியே ஆத்மாவாம். 'நான் கர்த்தா, நான் போக்தா, நான் சுகி' என்னும் அனுபவத்தாலும் புத்தியே ஆத்மா வென்றறியக் கிடக்கின்றது. அகங்காரம் புத்தியின் தர்மமே யன்றோ? வேதமும் ஆத்மா புத்தி வடிவினன் என்கின்றது. 'புத்தி யஞ்ஞத்தைச் செய்கின்றது, கர்மத்தைச் செய்கின்றது' என்ற சுருதியானது புத்திக்குக் கர்த்ருத்துவத்தைக் கூறுகின்றது. ஆதலால் புத்தியே ஆத்மாவாம். (இது விஞ்ஞானவாதி பௌத்தர் மதம்.)

## அஞ்ஞானாத்ம வாதம்.

புத்தியாத்மவாதியை மற்றொருவன் கண்டிக்கிறான். புத்தி ஆத்மாவாகாது. ஏனெனில் அது (புத்தி) அஞ்ஞானத்தின் காரியம். தவிர, புத்தி கணந்தோறும் நசித்துக்கொண்டிருப்பது. புத்தி முதலானவைகள் அஞ்ஞானத்தினிடத்து லயமடைகின்றன. ஸ்திரீகள், பாலர் முதலானவர்களிடத்தில் 'நான் அஞ்ஞானி' என்னும் அனுபவமிருக்கின்றது. ஆதலால் அஞ்ஞானமே ஆத்மாவாமன்றி புத்தி ஆத்மாவாகாது. சுருதியும் விஞ்ஞான மயனைக் (புத்தியைக்) காட்டிலும் வேறான ஆனந்த மயனை (அஞ்ஞானம்) மேலான ஆத்மாவாகக் கூறுகின்றது. (சுழுத்தியில் அஞ்ஞான காலத்தில் துக்கானுபவமின்மையால் அந்த அஞ்ஞானம் ஆனந்தமயமெனப்படுகின்றது.) நித்திரை வடிவ அஞ்ஞானத்தினிடத்து புத்தி முதலிய யாவும் லயமடைகின்றன. மிகுந்த துக்கமுள்ளவனுக்கும் நித்திராவஸ்தையில் அத்துக்கம் காணப்படுதலில்லை; ஆனந்தமேயிருக்கின்றது. ஆனால் அந்த நித்திராவஸ்தையில் 'நான் ஒன்றுமறியேன்' என்னும் அனுபவம் ஒவ்வொருவருக்கு மிருத்தலால் அங்கு அஞ்ஞானமிருப்பது பிரசித்தமாம். அந்த அஞ்ஞானமே ஆத்மாவாம். (இது பிரபாகரர் தார்க்கிகருடைய மதம்.)

## ஞானாஞ்ஞானாத்ம வாதம்.

அஞ்ஞானம் ஆத்மாவென்னும் மூடனை மற்றொரு மூடன் தூஷிக்கிறான்.

அஞ்ஞானம் ஆத்மாவாத லெங்ஙனம்? ஆத்மாவினிடத்து ஞானமும் காணப்படுகின்றது. ஞானமின்றேல் நான் அஞ்ஞானியென்று தன் அஞ்ஞானத் தன்மையை யேனும் ஒருவன் எவ்வாறு அறிதல்கூடும்? நித்திரையினின்

றெழுந்தவன் நான் ஒன்றுமறியாமல் சுகமாய்த் தூங்கினேன் எனத் தன்னனுபவத்தைக் கூறுவதால் அவ்வனுபவத்தில் ஞானம் அஞ்ஞானம் இரண்டும் காணப்படுகின்றன. (ஒன்றுமறியேன் என்பது அஞ்ஞானம்; சுகமாய்த் தூங்குதலும் இவற்றை யறிந்துகொள்ளுதலும் ஞானம்) சுருதியும் 'ஆத்மா ஞானஞ் ஞானரூப' னென்று தெளிவாய்க் கூறுகின்றது. ஆதலால் ஆத்மா கத்தியோதப் (மின்மினிப்) பூச்சிபோல் (ஒரு பாகம் பிரகாசமும் மற்றொருபாகம் அப்பிரகாசமு முடையதா யிருத்தல்போல) ஞானஞ்ஞான வடிவினதென்பது பெறப்படுகின்றது. வெறும் அஞ்ஞான சொரூபனென்றால் குடம் சுவர் முதலியவற்றைப்போல ஜடமாயிருத்தல் வேண்டும். ஆத்மா ஜடமெனல் பொருந்தாது. (இது பட்டர் மதம்.)

## சூனியாத்ம வாதம்.

இம்மதத்தை மற்றொருவன் கண்டிக்கிறான்.

ஆத்மா ஞானஞ்ஞான ரூபனாயின், அஞ்ஞானமும் ஞானமும் இருளும் ஒளியும் ஒன்றுக்கொன்று விரோதமானவையாகலின் ஆத்மா சித்தசித்து ரூபனாதல் வேண்டும். அஃது எங்ஙனம் சரியாகும்? ஞானஞ்ஞானங்களுக்கு சாமானாதிகரணியமாயினும் (ஓரிடத்திருக்கை), சம்யோக சம்பந்தமாயினும், ஒன்றையொன்று ஆசிரயித்தலாயினும் சம்பவியாது. ஞானமும் அஞ்ஞானமும் புத்தியும் புத்தியின் குணங்களும் வேறெதுவும் நித்திராவஸ்தையில் காணப்படுவதில்லை. சத்த பரிசாதிகளும் சுழுத்தியில் சூனியமாகவே காணப்படுகின்றன. சுழுத்தியில் நான் இருக்கிறேன் என்பதும் தோன்றுவதில்லை. தூங்கி எழுந்தோர் 'நான் ஒன்றும் அறியவில்லை' யென்கின்றனர். ஆகையால் ஒன்றுமில்லாமையாகிய சூனியமே ஆத்மாவாம்.

சிருஷ்டிக்கு முன்பு ஜகத்து அசத்து ரூபமா யிருந்ததென்றும் அசத்தினின்றே சத்துத் தோன்றியதென்றும் வேதமும் கூறுகின்றது. ஓர் குடம் மண்ணினின் றுண்டாயிற்றெனின், அதுவரை இல்லாததே உற்பத்தியாயிற்றேயன்றி இருந்து உண்டானதன்று. அதுபோல, அசத்திலிருந்தே உலகம் உண்டாயிற்று. ஆகையாலும் எல்லா விதத்தாலும் சூனியமே ஆத்மாவாதற் குரியதாகின்றது. (இது மாத்தியமிக பௌத்தர் மதம்)

அன்புள்ள ஞானகுமாரா! பரஸ்பரம் விரோதமுடையவர்களும் அந்தந்த மதத்திற்கேற்றவாறு அற்ப சுருதிகளையும் யுக்திகளையும் அனுபவங்களையும் கூறுகின்றவர்களுமாகிய புத்திராத்ம வாதி முதல் சூனியாத்மவாதி வரையிலுமுள்ள இம்மூடர்களால் நிர்ணயிக்கப்பட்ட மதங்களெல்லாம் பண்டிதர்களால் பிரதிவாதிகளுக்குப் பாதகமாயுள்ள சுருதிகளாலும் அனுபவங்களாலும் கண்டிக்கப்பட்டுள்ளன. அவ்வாறு கண்டிக்கப்பட்டுப் போயினமையின் புத்திரன் முதல் சூனியம் வரையுமுள்ள பதார்த்தங்களனைத்தும் விசேஷமாய் சுருதிகளாலும் அனுபவங்களாலும் ஆத்மாவன்றென்பதும் நிரூபிக்கப்பட்டது. பிரமாணங்களால் பாதிக்கப்பட்டுப்போன பதார்த்தம் வாஸ்தவமானதென்று பெரியோர்களால் அங்கீகரிக்கப்படாதன்றோ? ஆகையால் தக்க பிரமாணங்களால் பாதிக்கப்பட்ட புத்திரன் முதல் சூனியம் வரைக்கும் அனாத்ம வடிவமேயென்பது வெள்ளிடை மலைபோல் விளங்குகின்றது.

**சீடன்:**—குருநாதா! சுழுத்திகாலத்தில் சகலமும் லயமடைந்திருக்கையில் அங்கே சூனியமே காணப்படுகின்றது. வேறொன்று காணப்படுதவில்லை. அந்த சூனியமும் அனாத்மாவாயின் அதைவிட வேறொரு

ஆத்மாவென்னும் பெயருடைய பதார்த்தம் ஒன்றும் அனுபவிக்கப்படுத வில்லையன்றே ?

அங்ஙனம் (சூனியத்தினும் வேறாக) ஆத்மா இருக்குமாயின் ஏன் காணப் படவில்லை? அது (ஆத்மா) நித்திராவத்தையில் இருக்கிறதெனின் அதற்குப் பிரமாணம் யாது? அந்த ஆத்மா என்ன லட்சணமுடையது? சுழுத்தியில் அகங்காரமாதிய சகலமும்-பாதிக்கப்படுகையில் அந்த ஆத்மாமாத்திரம் ஏன் பாதிக்கப்படாது?

இருதய கிரந்திவடிவமான இந்த என் சந்தேகங்களை சுவாமி! யுக்தியா கிய வாளாயுதத்தால் சேதித்தருளவேண்டும்.

குரு :—பிரிய சீடனே! மிக்க சூக்குமமான இக்கேள்வி உனக்குத் தக்கதே. சூக்கும பதார்த்த ஞானம் சூக்கும புத்தியினிடத்துத்தான் காணப்படு கின்றது. இப்போது உன்னால் எது கேட்கப்பட்டதோ—உத்தமமும் சூக்குமமும் முமுட்சுக்களால் தெரிந்துகொள்ளத் தக்கதுமான அந்த எல்லா இரகசியத்தையும் உனக்குக் கூறுகிறேன் கேள். (தொடரும்.)

## மேலே என்ன நடந்திருக்கும்?

வரதக்ஷிணை வம்பில் அகப்பட்டுத் தேனிலகப்பட்ட ஈயைப் போலத் தத்தளித்து, சிறிது தேர்ந்த மனிதன், ஜீவனார்த்தமாக ஒருநாள் வெளியிற் சென்று திரும்பி வீட்டிற்கு வந்ததும், மனைவி 'குழந்தை ருதுவாகி இருக்கிறாள்' என்று புன்னகையுடன் கூறக் கேட்டு, சந்தோஷ மடைவதற்கு மாறாகக் கண்கலங்கி வாயிற்படியில் நின்ற வண்ணம் உள்ளே செல்வதா? அல்லது எங்கேயாவது ஓடிப்போய் சந்நியாசம் வாங்கிக்கொள்வதா? அல்லது குளங் குட்டையில் விழுந்து உயிர் துறப்பதா என்று ஆலோசித்துக்கொண்டிருந்தானாம். இத்தருணம் ஒரு மனிதன் எதிரேவந்து "ஐயா! செட்டியார் இன்னும் ஒருவாரத்தில் தாங்கள் விவாக விஷயமாக வாங்கிய கடனைத் தீர்க்காவிடில், தாவா செய்து அசல் வட்டி செலவு தொகையுடன் தங்களிடமிருந்து பணம் வசூலிக்கப்படுமென்பதை அறிவித்து வரச் சொன்னார். என்றானாம். இரண்டு நிமிடங் கழிந்தபின்னர் இவற்றையெல்லாம் கவனித்துக்கொண்டிருந்த அம்மனிதனுடைய மனைவி 'ஏன் பந்தற்கால் போன்று நிற்கிறீர்கள்? மேளகாரனை வரச் சொல்லுங்கள்; மற்ற சாமான்களை வாங்க ஏற்பாடு செய்யுங்கள்; சம்பந்திக்குத் தந்தி கொடுங்கள்' என்று சிடுசிடுத்துக் கூறிவிட்டு உள்ளே சென்றாளாம். இதற்குள், அண்டை அயல் வீட்டுப் பெண்கள் கொண்டாட்டமாகக் கண்டவாறு ஆபாஸமான வாக்கியங்களை இசைத்துப் பாடிக் கும்மி யடிக்க வந்துவிட்டனராம். இவர்களுடைய பாட்டும் பிறவும் இவனுக்குத் தலைமீது கோடையிடி விழுந்தாற்போலிருக்க அவன் கிழக்கு முகமாக் விரைந்து சென்றானாம். அம்மனிதன் சென்றதைப் பார்த்தால் திரும்பி வருவானோவென்ற சந்தேக முண்டாகுமாம். மேலே என்ன நடந்திருக்கும்?

# வள்ளுவர் உள்ளம்.

(253-ம் பக்கத் தொடர்ச்சி.)

(தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், பி. ஏ.)

"என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலர் என்னை
முன்னின்று கல்நின்ற வர்"

என்ற குறளால் வள்ளுவரது வீரத்தன்மை உணர்ந்து மகிழ்தற்பாலது. ஒரு சேனாவீரன் பகைவர்தம் சேனையுட் புகுந்து, அங்குள்ள படைத்தலைவன் முன்னே, "பகைவனே! என்னுடைய தலைவனெதிரே போரேற்று நின்று அவன் வேல்பட்டு வீழ்ந்து கல்லினிடத்தே நின்றவீரர் பலராவர். நீர் அக் கல்லிலே நில்லாமல், உம்முடலிலே நிற்றலை விரும்பினால், என்னுடைய தலைவனெதிரே போரேற்று நில்லாதே செல்லுங்கள்" என்பது இதனாற் போந்த பொருள். இதுவன்றோ சிறந்த வீரம்! (கல்லினிடத்து நிற்றலாவது-போரிலே இறந்துபோன வீரர் உருவத்தைக் கல்லிற் செதுக்கி வைத்தல்) மற்றும்,

"கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்"

என்ற குறளால் வள்ளுவரது தீரத்தன்மை நன்கு புலனாகிறது. "ஓர் படைவல்லான் தன் கையிலுள்ள ஆயுதமாகிய வேலைத் தன்னை எதிர்த்துவந்த யானைமேல் எறிந்துவிட்டு வருகின்ற யானைக்கு வேல் தேடித்திரிபவன் பகைவரால் எறியப்பட்டுத் தன் மார்பிலுள்ள வேலைக்கண்டு மகிழ்ச்சியுற்று, அவ்வேலைப்பிடுங்கி அக்களிற்றின் மேல் பாய்வான்" என்பது இதன் கருத்து. எனவே தன் மார்பில் பகைவர் எறிந்த வேலிருப்பதைக்கூட அறியாமல், மிக்க கோபத்தோடு திரிவானென்பது பெறப்பட்டது. இதுவன்றோ தீரம்!

"பேராண்மை என்ப தறுகண் ஒன்று உற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு."

பகைவர்மேல் மிக்க வலிமையோடு போர் செய்தல் ஆண்மையேயாயினும், மாற்றரசனுக்குத் தாழ்வு வந்தவிடத்து அவன்மீது இரக்கம் காட்டுதலே ஆண்மைக்கு அணியாகும். இத்தகைய ஆண்மையையும் அருளையும், கவியரசாகிய கம்பர் பெருமான், புவியரசாகிய இராமனிடத்துக் காட்டுகின்றார். தன் படைக்கலமிழந்து தனியனாய் அகப்பட்ட இலங்கையர் கோனது வலியற்ற நிலையைக்கண்ட இராமன், பகைவன்மீது பெருங்கருணை கொண்டு சொல்லிய பெருந் தன்மையைக் கம்பர்

"ஆளையா உனக்கமைந்தன மாருதமறைந்த
பூளையாயின கண்டனை யின்றுபோய்ப் போர்க்கு
நாளைவாவென நல்கினனாகிளங் கமுகின்
வாளைதாவுறு கோசலை நாடுடை வள்ளல்"

என்று அழகாக எடுத்தமைத்தார். இதுவே மாண்ட அறநெறி! இதுவே அறப் போர்! இதுவே ஆண்மை! இதுவே அருள்!

இனி வள்ளுவரது உள்ளம், எவ்விதம் காதல் கனிந்த உள்ளமாய் விளங்குகின்றது என்று ஆராய்வோம். பிணி மூப்பு இவையின்றி, எப்பொழுதும் ஒரு தன்மையராய் உருவும், திருவும், குலமும், குணமும், பருவ

மும், அன்பும் ஒத்தவராய தலை மகனும் தலை மகளும், பிறர் கொடுப்பவும் அடுப்பவுமின்றி ஊழ்வினைப் பயனுய்த் தாமே எதிர்ப்பட்டு காதலித்துக் கலக்கும் முறையையே களவியல் என்றும், இங்ஙனம் கலந்த தலை மகனும் தலை மகளும் முறைப்படி மணம்புரிந்து இல்லறமாகிய நல்லறத்தை இனிது நடத்தி இன்பம் துய்த்துப் பின் இவ்வுலக வாழ்வின் நிலையாமையைக் கண்டு வீடுபெற முயல்வதைக் கற்பியல் என்றும் கூறும் தமிழ் நூல் வழக்குப்பற்றி, அகத்துறைக் கருத்தைப் பெரிதும் விளக்குகின்றார். இவ்விதம் கூறுவதில், காதலர் கண்டு களித்தல், தலைமகன் காதல் உரைத்தல், ஒருவருக்கொருவர் குறிப்புணர்தல், தலைமகள் உடம்படுதல், பிரிவுழி வருந்துதல், இல்லறம் நடத்தல், ஊடி உவகை பெறுதல் முதலிய செயல்களை அவர் செய்திய சொற்களில் அமைத்திருக்கும் தன்மையே அவரிடம் காதல் எவ்வளவு கனிவு பெற்றிருக்கின்றதென்பதைப் பெரிதும் காட்டுகின்றது. உதாரணமாக ஒருசில செய்யுட்களைச் சொல்லுதல் மிகை யாகாது.

"யானோக்குங் காலை நிலநோக்கும் நோக்காக்கால்
தான் நோக்கி மெல்ல நகும்"

"எழுதுங்கால் கோல்காணுக் கண்ணேபோல் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து"

"செல்லாமை யுண்டேல் எனக்குரை மற்றுநின்
நல்வரவு வாழ்வார்க் குரை"

முதலிய குறள்கள் எவ்வளவு இன்பம் பயப்பனவா யிருக்கின்றன! இவற்றின் பொருளை விரிக்கிற் பெருகும். நிற்க,

அவரது உள்ளம் **சாதி, சமயம் முதலிய் சழக்கற்ற சால்புடை உள்ளமாய் விளங்குகின்றது.** பிறப்புக் காரணமாக ஏற்றத்தாழ்வும் வேற்றுமையுமில்லை என்னும் சிறந்த கருத்தை

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்"

என்ற அழகிய குறளால் நன்கு விளக்குகின்றார். மற்றும்,

"அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்"

என்ற குறளில் அந்தணர் என்பவர், பிறப்பால் உயர்வு கற்பித்துக்கொள்ளும் பார்ப்பனர் அல்லர்; முப்புரி நூல் பூண்ட இரு பிறப்பாளரல்லர்; மனு ஸ்மிருதியில் உயர்ந்தோராகக் கூறப்படும் பிராமணர் அல்லர் என்றும், அந்தணத் தன்மை பிறப்பினுல் வருவதன்றென்றும், ஒவ்வொருவருடைய குணத்தாலும் நடையாலும் வருவதென்றும் அழகாகக் கூறியிருக்கின்றார்.

வள்ளுவர் உள்ளம் சமரச சன்மார்க்கம் ததும்பியது. சைவசமயப் பெரியோர்களெல்லாம் "எண்குணத்தான்" முதலிய சொற்பிரயோகங்களைக் காட்டி அவரைச் சைவர் என்பர். வைஷ்ணவர், "தாமரைக்கண்ணானுலகு," "அடியளந்தான்" "திரு" என்னும் சொற்பிரயோகங்களைக் காட்டி அவரை வைணவர் என்பர். சமணரோ "மலர்மிசை ஏகினான்" என்பதனையும் "அவிசொரிந்து" என்ற குறளையும் எடுத்துக் காட்டி அவரைச் சமணர் என்

பர். மற்றும் கிறிஸ்தவரும் முஸ்லிம்களுங்கூட அவரைக் கிறிஸ்தவர் என்றும், மகம்மதியர் என்றும் கூறும் காலம் கிட்டிவிட்டது. ஆகவே, அவர் எம்மதத்தினர்? "**எம்மதமும் சம்மதித்தினர்**" என்பதே சால்பு. (இதை விரிவாய் அறிய விரும்புவோர், ஆனந்தபோதினி 9-ம் தொகுதியில் என்னால் எழுதப்பெற்ற "திருவள்ளுவர் மத ஆராய்ச்சி" என்னும் கட்டுரையை ஊன்றிப் படித்துணர்வார்களாக.)

இன்னும் அவரது உள்ளம் **பாவலர் போற்றும் பண்புடை உள்ளமாகவும்** அமைந்து கிடக்கின்றது. திருவள்ளுவர் காலத்தும், அதற்குப் பின்னும் எழுந்த பெருநூலியற்றிய ஆசிரியர்கள் எல்லாரும் நம் ஆசிரியர் பெருமானின் வாக்கைப் பொன்னே போல் போற்றி அவர்தம் சொல்லேயும் பொருளேயும் தத்தம் நூலில் அழகுற அமைத்து இன்புறுவாராயினர். மணிமேகலை என்னும் அணிகெழுநூலை யியற்றிய சீத்தலைச் சாத்தனரென்ன! நந்தாப்பொருண்மைமிகுந்த சிந்தாமணியியற்றிய திருத்தக்கதேவர் என்ன! செம்பொருளின்பமே தன் கவியின் இலக்கணமாம் எனக்கொண்ட கம்பர் பெருமானென்ன! இம்மாபெரும் புலவர்களனைவரும், நம் வள்ளுவப் பெருந்தகையாரின் சொல்லேயும் பொருளேயும் பொன்னேபோல் போற்றியிருக்கின்றனரென்றால் பிற புலவர்கள் பொற்றுவதற்கு ஓர் ஐயமுண்டோ?

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை"

என்னும் குறளை,

"தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை என்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை தேராய்"

என்று **மணிமேகலை** ஆசிரியர் அப்படியே எடுத்தாள்வதும்,

"வேட்ட பொழுதில் அவை அவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள்"

என்னும் குறளை,

"வேட்டார்க்கு வேட்டனவே போன்றினிய வேய்மென்றோள்
பூட்டார் சிலைநுதலாள் புல்லா தொழிவேனோ"

என்று **சிந்தாமணியாசிரியர்** எடுத்தாள்வதும். மற்றும்

"கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்"

என்ற குறளை,

"எடுத்தொருவ ருக்கொருவர் ஈவதனின் முன்னே
தடுப்பது நினக்கழகி தோதகைவில் வெள்ளி
கொடுப்பதுவி லக்குகொடி யோயுனது சுற்றம்
உடுப்பதுவும் உண்பதுவும் இன்றிவிடு கின்றாய்"

என்றும்,

"நல்லா றெனினுங் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று"

என்ற குறளை,

"வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால்
எள்ளுவ என்சில இன்னுயி ரேனும்
**கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றல்"**

**என்றும் கம்பர்பெருமானீ** எடுத்தாளுந்தன்மை நாம் மகிழ்வதற்குரியதாகும்.

இதுவரை கூறியவாற்றால், அவரது உள்ளம் ஒருவாறு விளங்குவதாகும். இத்தகைய பெரியார் எத்தகைய உயரிய நிலையில் இருந்திருக்கவேண்டும் என்பதைச் சற்றே சிந்திமின்! ஆனால் அவர் தம்மை என்னிலையில் அமைத்திருக்கின்றார் என்பது அவரது நூலே நன்கு விளக்கும். அவர் ஓரிடத்துச் சிறந்த அரசனாக விளங்குகின்றார். பின்னர் உயர்ந்த அமைச்சனாக விளங்குகின்றார். சிறந்த சேனாவீரராக விளங்குகின்ற அவர், தூய தன்மையுடைய தூதுவனாகவும் ஒப்பற்ற ஒற்றனாகவும் விளங்குகின்றார். ஓரிடத்துச் சிறந்த உழவராக விளங்குகின்ற அவர், பிறிதோரிடத்து மாபெரும் மருத்துவனாக விளங்குகின்றார். காவலர் உள்ளம் பாவலர் உள்ளமாக மாறுகின்றது. காதலர் உள்ளம் துறவியின் உள்ளமாக மாறுகின்றது. இவ்விதமாக அவரது உள்ளம் பற்பல துறையிலும் சிறந்து கிடக்கும் தன்மை பெரிதும் போற்றத்தக்கது. (தொடரும்.)

## "பழைய வௌவால்."

வௌவால்கள், பறவைகளுக்கும் விலங்குகட்கும் நடந்த சண்டையில், இருகட்சிக்கும் கோட் சொல்லிக் கடைசியில் ஒரு வகுப்பிலாயினும் சேரவும் வெளியேறவும் வெட்கிப் பகல் முழுதும் பதுங்கி யிருந்ததாக ஒரு கதை யுண்டு. அதுபோல், உன்னிடம் தேனொழுகத் தித்திப்பாய்ப் பேசி, உனது இயக்கமே—வியவகாரமே சிறந்ததென விளம்பி, உன்னுடன் சேர்ந்து வேலை செய்துகொண்டே உனக்குத் தெரியாமல் உன்னெதிரியிடம் சென்று அவனது விவகாரத்தை மெச்சுகிறான்-அவனையும் முடுக்குகிறான் ஒருவன். தெய்வாநுகூலமாய் அவனது அசட்டுக் கொள்கை உனக்கும் உனது பகைவனுக்கும் புலப்பட்டுவிடுகிறது. பின்னாலவனை நம்புவீர்களா? உங்களுக்குட் சமாதானம் நேரும் பொழுது பகை விருத்தி செய்து வேடிக்கை பார்த்த பழைய வௌவாலை—அந்தக் குண்டுணிக் குப்பையை, இந்தச் சுபகாரியத்திற் சேர்த்துக் கொள்கிறீர்களா? மாப்பிள்ளை வீட்டாரிடமும் பெண் வீட்டாரிடமும் விளைவிக்கும் விரோதமும், அண்ணன் தம்பியிடமும், தகப்பன் பிள்ளை யிடமும் மாமி மருகியிடமும் கணவன் மனைவியிடமும் அவர்கள் காண்பிக்கும் விசித்திர வேலைப்பாடமைந்த கோட்பணிதியையும் கொட்டியளக்க முடியுமா? இவர்களாற் சீர்கேடடைந்த குடும்பங்கள் எண்ணத் தொலையுமா? எட்டி லடங்குமா? ஆதலால் எதையும் ஒருவர் கூறியதையும் நம்பி விடாமல் தீர்க்க விசாரித்து அமைதியாய்ச் செய்ய வேண்டும்.

# கால வைரவன்.

(பண்டிதர். L. இராமசாமி நாயுடு.)

269-ம் பக்கத் தொடர்ச்சி.

அந்த மொழிகளைக் கேட்டு "கோபிநாதராயரும் நானும் சேர்ந்து இப்பொழுதுதான் வந்தோம்; அவர் மிக்வும் நல்லவர் போலக் காணப்படுகிறார். உன் அப்பாவுக்கும் அவருக்கும் என்ன பிரமாதம் வந்தாலும் நான் இருக்கிறே னல்லவா எல்லாம் சரிப்படுத்திவிட" என்று கிருஷ்ணராவ் கர்வமாகச் சொன்ன வார்த்தைகள் துளசிபாயிக்கு அர்த்தமாகாமல் போனதோடு வரப்போகிற சண்டமாருதக் காற்றிலும் மழையிலும் தன்னுடைய கிருஷ்ணராவுக்கு என்ன ஆபத்து நேரிடுமோ என்று விசாரித்தாள். இந்த விவகாரத்தில் கிருஷ்ணராவைப் பார்த்து எந்தக் கெடுதலையும் உண்டாக்கி மாட்டிக் கொள்ள வேண்டாமென்று சொல்லிக்கொண் டிருக்கும்போதே "ஐயையோ அம்மாடி!" என்ற ஓலம் எங்கேயோ இருந்து வந்து காதில் விழுந்தது. பெண் குரல். என்ன சங்கதியோ தெரிந்து கொள்ளலாமென்று கிருஷ்ணராவ் வீதிப்பக்கம் ஓடிவந்து பார்த்தான். அங்கே ஒன்றும் தெரியவில்லை. பக்கத்திலிருந்த சாவடிக்குள் எட்டிப் பார்த்தான். தாசில்தாருடைய சமையல்காரி (கொஞ்சம் செவிடு) ஒரு மூலையில் தென்னந்தடுக்கு வேய்ந்த அறையில் சமையல் செய்துகொண் டிருக்கிருள். தாசில்தார் வீட்டில் இல்லை. ரெவின்யூ இன்ஸ்பெக்டரும் அவரும் சேர்ந்து சாவியான அநேக விளை நிலங்களைப் பரீக்ஷித்து குடிகளின் தீர்வை வஜா விஷயமாய் விசாரணை செய்யப் புறப்பட்டுப் போனர்கள். 'ஐயையோ அம்மாடி' என்ற கூக்குரல் அந்த வீட்டிலிருந்தே வந்திருக்க வேண்டுமென்று யூகித்து கிருஷ்ணராவ் உள்ளே பிரவேசித்தான். புழக்கடை வாயிலில் அவன் கண்ட காட்சி அதியற்புதம்! ஆச்சரியமான சங்கதி! கிணற்றுக்குப் பக்கத்தில் அப்போதே ஸ்நானம் செய்து ஈரப்புடவையோடு வயது முதிர்ந்தவள், பருத்த உடல் படைத்த ஒரே வொரு சுமங்கலி நுழைவாயிலுக் கெதிரில் முகத்தைத் திருப்பி நின்றுகொண்டிருக்கிருள். அவளுடைய முகத்தால் அவள் பயபீதி அடைந்திருக்கிருள் என்பது ஸ்பஷ்டமாகிறது. வாயிற்படியில் கிருஷ்ணராவின் பக்கம் முதுகு திருப்பி அதாவது அவளுக்கு முகம் காட்டி—கருநாய்! இந்த அம்மாள்தான் தாசில்தாருடைய இல்லக் கிழத்தி. பேர் லட்சுமிபாய் அம்மாள். ஆண் சிங்கம் கோபிநாதராயரையே திக்குமுக்காடச் செய்த கருநாய் தாராள தேகமுள்ள ஸதிரீயான லட்சுமிபாய் அம்மாளைப் பயப்படுத்திவிட்டது என்பதில் ஆச்சரிய மென்ன இருக்கிறது? ஆனல் தெய்வாதீனமாய் லட்சுமிபாயம்மாள் கையில் செம்பிருந்ததனல் நாய் தூரத்தில் உட்கார்ந்து கொண்டே, தனக்கு ஸ்தூல தேகிகள் மீதுள்ள கோபம் அனைத்தையும் அபிநய ரூபத்தில் காட்டிக்கொண் டிருக்கிறதே யல்லாமல் அந்த அம்மாளைச்

சமீபித்து வாயினுல் காரிய ரூபத்தில் வெளிப்படுத்தத் தைரியங் கொண்டதல்ல. இந்தக் குழப்பமான சந்தர்ப்பத்தில் நமது கிருஷ்ணராவ் வந்ததைப் பின்புறம் தலையைத்திருப்பிப் பார்த்துவிட்டது. பார்த்தவுடனே வாயை விசாலமாக—ஒரு முழம் பிளந்து "குய்யா" மென்று குளத்தங்கரையில் அடிபட்டதனுல் உண்டான நோய் முழுதும் மறுபடியும் ஒருதரம் அநுபவித்தது போல் கத்தி, காலையில் குளக்கரையில் ஆரம்பித்த பல்லவியை இங்கே பூர்த்தி செய்தது. பிறகு சுவற்றின்மீது ஒரே தாவில் எவ்வி அதே ஓட்டம், வாயுவேகம் மனோவேகமாய்ப் பறந்துவிட்டது. "யாரடா சாமி நீ! எங்கள் பெரிய பிள்ளை மாதிரி இருக்கிருய்? நீ வந்ததைப் பார்த்து அந்தக் கட்டையிலே போன நாய் எடுத்தது ஓட்டம்! நீ வராமலிருந்தால் எனது கதி என்ன ஆயிருக்குமோ? நீ மகராஜனு யிருக்கவேண்டும். ஸ்நானம் செய்துகொண்டிருந்தால் சுவற்றின்மேல் ஏறிக்குதித்து வாசற்படியில் வந்து நன்ருய் உட்கார்ந்து கொண்டது. பாவம் ரெவின்யூ இன்ஸ்பெக்டர் பெண் இங்கேயே ஸ்நானம் செய்து கொள்ளலாம் இருங்கள் என்று சொன்னுள். புத்தி யில்லாமல் ஸ்நானம் செய்வதற்கென்று இங்கே வந்தேன். வந்ததற்கு அநுபவித்தேன். பாவம் அந்தப் பெண் எங்கள் பெரிய பெண்போல; தங்கக்கட்டி! வீட்டுக் காரியங்களை எவ்வளவு சிரத்தையாகச் செய்து கொள்ளுகிருள்? தாயில்லாத பெண்ணும் பாவம்! ஏதோ ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு குறை! ..................அப்பனே! உனது பேர் என்ன சொல் பார்க்கலாம்?" என்று மிகவும் அன்போடு கேட்டாள். பேர் சொல்ல ஆசைதான்; நமது கிருஷ்ணராவுக்கு வாய்திறக்க இடங்கிடைத்தாலன்ருே? சில ஸ்திரீகளுக்குள்ள சகஜமான குணம் என்னவென்ருல் ஒரு ஆசையைக் குறித்துப் பேசிக்கொண்டிருக்கும்போதே அவர்களுக்கு ஞாபகம் வந்ததை எல்லாம் கொட்டி அளப்பதே——அவை சந்தர்ப்பமானுலும் சரி அசந்தர்ப்பமானுலும் சரி; பிரஸ்துதமா யிருந்தாலும் சரி அப்பிரஸ்துதமா யிருந்தாலும் சரியே; லட்சுமிபாயம்மாளுடைய அப்பிரஸ்துத பிரசங்க மத்தியில் கிருஷ்ணராவ் பேர் சொல்ல முடியாமல் சும்மா இருக்க நேர்ந்தது. அந்த அம்மாளுடைய பேச்சு தோரணை மெலிவடைந்த பிற்பாடு கிருஷ்ணராவ், "என் பெயர் கிருஷ்ணராவ் என்பார்கள்; நான் இவ்வூர் கர்ணம்" என்று சொல்லிக்கொண்டே இதென்னடா பெரிய தொந்தரவா யிருக்கிறதென்று வீதிப்பக்கம் நடந்தான். கொஞ்ச நேரத்துக்குள்ளேயே தாசில்தார் மாத்திரமல்லாமல் தாசில்தாருக்குத் தாசில்தாரான (கோபிநாத ராயர் சம்சாரத்துக்குப் பயந்து நடந்து கொள்ளுகிருர் என்று வில்லைச் சேவகர்களுடைய "கசுகுசு"க்கள் மூலம் வெளியாகிறது.) லட்சுமி பாயம்மாளாலும் கூடப் புகழப்பெற்று ஸ்தோத்திரம் கொண்டுவிட்டதனுல் நமது கிருஷ்ணராவின் கர்வத்துக்கு எல்லையே இல்லாமல் போய்விட்டதென்ருல் ஆச்சரியம் என்ன இருக்கிறது? இதில், லட்சுமி பாயம்மாள் துளசிபாயின் பிரஸ்தாபத்தைக் கொண்டு வந்ததைப் பற்றி ஆழ்ந்து சிந்திக்கும்போது இந்த விவகார மெல்லாம் சமயம் வந்தபோது கிருஷ்ணராவ்—துளசிபாய் திருமணத்திற்கு சகாயம் செய்தே தீருமென்று அவனுக்கு நம்பிக்கை உண்டாயிற்று.

இவ்விதமான ஆலோசனைகளோடு அவன் வீதிக்குள் வருகிறபோது எதிரில் இருந்த சுப்பிரமணிய ஐயர் வீட்டிலிருந்து ஏதோ கூச்சல் காதில் விழுந்தது. கண்டத் தொனியைக் கொண்டு ரெவின்யூ இன்ஸ்பெக்டர் வெங்கோப ராயருக்கும் தாசில்தார் கோபிநாதராயருக்கும் ஏதோ வாக்குவாதம் நடந்து

கொண்டிருக்கிறதென்று நமது கிருஷ்ணராவ் கிரகித்தான். உள்ளே நடக்கிற தடபுடலைப் பார்த்தால் துளசிபாய் சொன்னதுபோல் அவர்கள் இரண்டு பேரும் கலந்து கொண்டார்கள் என்று அவனுக்குத் தெளிவாகிவிட்டது. இதுதான் சமயமென்று மெதுவாக சுப்பிரமணிய ஐயர் வீட்டுக்குள் பிரவேசித்தான் கிருஷ்ணராவ். கூடத்தின் வாயிற்படி யோரம் நின்று கொண்டான். உள்ளே யிருந்த ஆபீசர்கள் இரண்டு பேருக்கும் விவகாரம் சுருதி மிஞ்சி இராகம் உள் பாய்ந்துவிட்டது——"நீ சிறுவயதில் தோட்டத்தில் நெல்லிக்காய் திருடிவிட்டபோது தோட்டக்காரன் கண்டுகொண்டு உன்னைச் சாகும்படி சாட்டையால் வளாசினான்; நீ எனக்குச் சொல்ல என்ன இருக்கிறதடா கோபா?" என்று ஒருவர்; "நீ மாத்திரம் என்ன புத்திமானாகி விட்டாய்? மூன்றும் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தபோது நீ வாத்தியார்-



கிருஷ்ணையர் டெஸ்கில் இங்கியைக் கொட்டிப்போட்டு, வாத்தியார் 'யார் செய்த வேலையடா?' என்று கேட்டபோது நீ மூச்சுவிடாமல் 'கப்சுப்' என்று வாயை மூடிக்கொண்டிருக்க, பிறகு வாத்தியார் கண்டு பிடித்துக்கொண்டு பிரம்பினால் வெளுத்து வாங்கினது மறந்துவிட்டாயோடா வெங்கோபா?" என்று இன்னொருவர். இந்த மாதிரிப் பேச்சுகள் வெகு 'ஜோரா'கப் போய்க் கொண்டிருந்ததைக் கேட்டு, கிருஷ்ணராவ், இன்னும் சும்மா இருந்தால் மானபங்கம் வருமோ என்னமோ என்று நினைத்து, கதவை மெல்லத் தள்ளிக் கொண்டு உள்ளே பிரவேசித்துப் பார்க்கும்போது "கோபன் வெங்கோபன்" ஆகிய இருவருக்கு மிடையில் சாண் இடங்கூட இல்லை. அப்பொழுதே இரண்டு பேருடைய வயிறுகளும் ஒன்றை யொன்று தொட்டுக்கொண் டிருந்தன. முகங்கள் செக்கச் செவேல் என்று சிவந்து விட்டன. கோபம் இருவர் முகங்களிலும் தாண்டவ மாடிற்று. இரண்டு பேரும் பற்களைப் படபட வென்று நெரிக்கிறார்கள்; விரல்களைக் கெட்டியாக மூடி, தேய்த்துத் தேய்த்து என்னமோ உருண்டை செய்கிறவர்களைப்போல் முறுக்கிக் கொண்டிருக்கிறார்கள். இந்த உக்கிர நிலையில் கதவு திறந்த சப்தத்தைக் கேட்டார்கள். வாயிலில் நின்ற கிருஷ்ணராவைப் பார்த்தார்கள். உபந்நியாசத்துக்கு இதுதான் சந்தர்ப்பமென்று கிருஷ்ணராவ் "நன்றாயிருக்கிறது! தாங்கள் இரண்டு பேரும் ஒரு டிப்பார்ட்மென்ட் உத்தியோகஸ்தர்கள். சிறுவயதில்

ஒன்ருகப் படித்தவர்கள். ஸ்நேகமாயிராமல் பந்தயச் சேவல்களைப்போல் ஒருவருக்கொருவர் போராடிக் கொண்டிருப்பது என்ன மரியாதை? நான் உங்களைக்காட்டிலும் தாழ்ந்தவன்; வீதியில் சேவகர்களிருக்கிருர்கள். எங்களைப் போன்றவர்கட்கு இந்த அசந்தர்ப்பம் தெரிந்தால் நன்ருயிருக்குமா? என்று ஆலோசனை செய்யுங்கள்'' என்று, கருநாய் காரணமாக இதுவரை தாசில்தாரை ஜேபியில் போட்ட தைரியத்தோடு லெக்சர் கொடுத்தான். இந்த உபந்நியாசம் தான் நினைத்தபடி அவர்களுடைய கோபத்தை விலக்கி லஜ்ஜை மீறச் செய்ததைப் பார்த்து, மனதுக்குள் மகிழ்ச்சி யடைந்து கிருஷ்ணராவ் விவகாரம் நேராகிறது என்று நினைத்து, இந்த நாடகத்தில் சூத்திரதாரத்வம் வகித்தால் தன் பேச்சை அவர்களிருவரும் கேட்கும்படியான அவஸ்தையில் இருக்கிருர்கள் என்று ஆலோசித்து, மறுபடியும் கொஞ்சம் தைரியம் உண்டாக்கிக் கொண்டு தன்னுடைய இரண்டு கைகளாலும் அவ்விருவர்களுடைய வலது கைகளையும் பற்றி, பிடிக்கச் செய்து "இனி நீங்கள் ஸ்நேகமாயிருக்க வேண்டும்'' என்று பின்னும் ஏதோ கொஞ்சம் பிரசங்கம் செய்யலாம் என்று ஆரம்பிக்கையில் கோபனும் வெங்கோபனும் ஒருவரையொருவர் கட்டித் தழுவிக்கொள்ளும் பிரயத்தனத்தில் இருக்கிருர்கள் என்பதைத் தெரிந்துகொண்டு, இவர்களுக் கிடையிலிருந்தால் இரண்டு தொந்திகளும் சேர்ந்து நசுக்கி அப்பளம் செய்துவிட்டால் என்ன செய்வதென்று ஒரு பக்கமாக நழுவிச் சிறிது தூரத்தில்போய் நின்றுகொண்டு வயோதிக ஆபீசர்களின் ஆலிங்கனத்தைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான். "என்னை நீதான் முதலில் வெங்கோபா என்று சொன்ருய்'' என்று ஒருவர்; "என்னை கோபா என்று கூறிஞய்'' என மற்ருருவர். "உன்னேடு எப்போதும் சண்டைக்கு வருவதே யில்லை யென்று கன்னத்தில் அடித்துக் கொள்ளுகிறேன்'' என்று ஒருவர்; "உன்னேடு எப்போதும் கோபமாகப் பேசுவதில்லை என்று காதுகளைத் திருகிக்கொள்ளுகிறேன்'' என்று மற்ருருவர். "தெரியாமல் உன்னைப் பேசிவிட்ட வார்த்தைகளுக்காக மன்னிக்க வேண்டும்'' என்று வெங்காபராயர்; "புத்தியில்லாமல் கண்டபடி சத்தம் போட்டதற்காக மன்னிக்க வேண்டும்'' என்று கோபிநாதராயர். பிறகு, உண்டான பச்சாத்தாபம் பாஷ்ப ரூபமாக அவர்களுடைய பெரிய உதரங்களில் பாய்ந்துகொண் டிருக்கும்போது ஒரு விசேஷம் நடந்தது.

வெங்கோபராயருடைய கோபம் குளிர்ச்சி யடைந்துகொண் டிருந்தபோது அவருடைய பார்வை வாயிலில் நின்றிருந்த கிருஷ்ணராவ் மீது விழுந்தது. நடந்த விஷயங்களெல்லாம் அவருடைய நினைவிற்கு வந்து "நேற்றுப் பிறந்த சின்னப்பயல் இவ்வளவு கூத்துச் செய்வாஞ!'' என்று போய்க்கொண்டிருந்த கோபம் திரும்பி வந்தது. "கிருஷ்ணு! உனக்கென்னடா சம்பந்தம் இந்த விவகாரத்தில்? ஏதோ நம்மவன் ஆயிற்றே என்று சும்மா இருந்துகொண்டிருந்தால், உன்னுடைய அதிகப் பிரசங்கித்தனம் வெகு மேலே போகிறது. உன்னை எந்தப் பயலடா மத்தியஸ்தத்துக்கு வரச் சொன்னது? காமாட்டிப்பயல் காமாட்டிப்பயல் யோக்கியதையில் இருக்க வேண்டும்'' என்று வெகு உக்கிரத்தோடு கர்ச்சித்தார் வெங்கோபராயர். இந்த வார்த்தைகளைக் கேட்டு கோபிநாதராயர் "இந்தா! இந்தச் சிறுவனை ஏதேனும் சொன்ஞல் நான் ஒப்பமாட்டேன், ஜாக்கிரதை; சிறுவயதா யிருந்தாலும் மஹாபுத்திமான்; இப்போது இவன் இங்கே இல்லாமலிருந்தால் நாமிருவரும் கழுதைகளைக் காட்டிலும் நீசத்தனமான பிரவர்த்தியி லிறங்கியிருப்போம்.

அவனுக்கு' மரியாதை செய்வதை விட்டுக் கோபித்துக்கொள்ளலாமா? இங்கே வா கிருஷ்ணராவ்! காலையில் நீ காட்டின தைரியம் ஜென்மத்திற்கும் மறக்கக்கூடிய விஷயமல்ல" என்று கோபிநாதராயர் அந்த இளைஞனுடைய கையைப் பிடித்துக் கொண்டார். வெங்கோபராயருக்கு இதெல்லாம் ஒன்றுமே அர்த்தமாக வில்லை. ஒரு தாசில்தார் ஒரு சாதாரண கர்ணத்தை 'இங்கே வா கிருஷ்ணராவ்' என்று அருமை பாராட்டிக் கையைப் பிடித்ததைப் பார்த்தது அவருடைய சர்விஸில் இதுதான் முதல் தடவை யாதலால் ஆச்சரியம் முகத்தில் விளங்க "இவன் கர்ணம் கிருஷ்ணராவ், யாரென்றிருக்கிறாய்?" என்றார். இதைக் கேட்ட கோபிநாதராயர் "தெரியும். கர்ணம் என்றால் என்ன? மநுஷனே. இந்தப் பையன் காலையில் குளத்தங்கரையில் இல்லாதிருந்தால் கருநாய் என்னை என்னபாடு படுத்தியிருக்குமோ?"— "குளத்தங்கரை கருநாய்" இந்த இரண்டு வார்த்தைகளும் காதில் விழுந்த மாத்திரத்தில் வெங்கோபராயருக்குப் பேய் அறைந்ததுபோ லிருந்தது. ஆறுமாதங்களுக்கு முன்பு தமக்கும் கருநாய்க்கும் நடந்த போராட்டம் அவ்வளவும் ஞாபகத்திற்கு வந்தது. முகத்தில் பயக்குறிப்புத் தோன்ற வெங்கோபராயர் "என்ன? கருநாயா?" என்று உசாவியபோது, நடந்த சங்கதிகளை யெல்லாம் ஒன்றுவிடாமல் பட்டுக் கத்தரித்ததுபோல் சொல்லி, கிருஷ்ணராவின் வீரப்பிரதாபங்களைப் பலபடப் பாடி முடித்தார் கோபிநாதராயர். இதைக் கேட்ட வெங்கோபராயர், "கிருஷ்ணா! நம்முடைய ஊர் கருநாயை அடித்துத் துரத்திவிட்டாயாமே அப்பா! எவ்வளவு கெட்டிக்காரன்" என்று முதுகைத் தட்டிக் கொடுத்தார்.

இதற்குள் தாசில்தாருடைய மனைவி லட்சுமி பாயம்மாள் உள்ளே பிரவேசித்தாள். அந்தச் சம்சாரத்தைக் கண்டவுடனே கோபிநாதராயர், ஆமை தன் சத்துருவைக் கண்டமாத்திரத்தில் அவயவங்களை ஓட்டிற்குள் இழுத்துக் கொண்டு அடங்கிவிடுவதுபோல் ஒடுங்கிப் போய்விட்டார். அவருடைய சந்தோஷமெல்லாம் மாயமாய்ப் போய்விட்டது. ஆனால் பாரியாளின் முகம் சிரித்துக்கொண்டிருந்ததைப் பார்த்து அவருக்குக் கொஞ்சம் தைரியம் உண்டாயிற்று. லட்சுமிபாயம்மாள் தாசில்தாரையும் ரெவின்யூ இன்ஸ்பெக்டரவர்களையும் பார்த்து "ஓஹோ! பாலிய ஸ்நேகிதர்களல்லவா? அதுதான் பசிகூடத் தோன்றவில்லைபோ லிருக்கிறது. சமையலாகிவிட்டது ஸ்நானத்திற்கு எழுந்திருங்கள்" என்று புன்சிரிப்புடன் சொன்னாள். "கிருஷ்ணராவ் இல்லாதிருந்தால் எங்கள் பாலிய ஸ்நேகம் மண்ணாகப் போயிருக்கும்" என்று அவர்கள் மனதுக்குள் சொல்லிக்கொண்ட சங்கதி அவளுக் கெப்படித் தெரியும்? இதற்குள் லட்சுமிபாயம்மாள் கிருஷ்ணராவ் பக்கம் திரும்பி "இதோ, அந்தப் பையனும் இங்கேயே இருக்கிறான். அப்பனே! சொல்லாமலே இங்கே வந்துவிட்டாய்! உனக்கும் போஜனத்துக்குச் சொல்லி யனுப்ப வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே வந்துவிட்டாய்!" என்று சொல்லும்போது வெங்கோபராயர் தமக்குள் "இவர்கள் எல்லாருக்கும் பைத்தியமா என்ன? இந்த வார்த்தைகள் எனக்கென்னமோ அர்த்தமாகாமலிருக்கின்றன. இந்தப் புகழ்ச்சி எல்லாம் கிருஷ்ணராவுக்கா!" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போது, லட்சுமி பாயம்மாள் வெங்கோபராயர் பக்கம் திரும்பி "ராயரவர்களே! தாங்களுங்கூட இன்றைக்கு எங்கள் வீட்டுக்குச் சாப்பாட்டுக்கு வரவேண்டும். ஒன்றும் தடைசொல்லக்கூடாது" என்று சொல்லிவிட்டு மறுபடியும் கிருஷ்ணராவ் பக்கம் திரும்பி "அப்பனே உன்

னைக் கண்டால் ,,கருநாய்க்குச் சிங்கசொப்பனம்'' என்று சொல்லும்போது கோபிநாதராயரும் வெங்கோபராயரும் திடுக்கிட்டுப் போனார்கள். "மறுபடியும் கருநாய் என்ன?'' என்று இருவரும் ஏககாலத்தில் கேட்டார்கள். அப்போது லட்சுமிபாயம்மாள் ஸ்நானம் செய்யும்போது கிணற்றடியில் நிகழ்ந்த சமாசாரங்களை எல்லாம் தெரிவித்தாள்.

இதற்குள், துளசிபாயும் இந்தப் பேச்சுகளைக் கேட்டு அறையின் ஒரு பக்கத்தில் ஒரு தினுசான புன்சிரிப்புடன் வந்து நின்றுகொண் டிருந்தாள். கிருஷ்ணராவின் திருஷ்டி பின்பக்கமே சிதறிக்கொண்டிருந்தது. துளசிபாயின் புன்சிரிப்பு கிருஷ்ணராவின் உதடுகளின்மீதுகூட மந்தஹாசச் சந்திரிகை உதயமாகுமாறு செய்துகொண்டிருந்தது. கிருஷ்ணராவின் மந்தஹாசம் கர்வசூசனையாகக்கூட இருந்தது. லட்சுமிபாயம்மாள் சொன்ன கருநாய்க் கதையைக் குறித்து ஏகாக்கிரச் சித்தத்துடன் ஆலோசனையில் மூழ்கியிருந்த வெங்கோபராயர் கிருஷ்ணராவ் மீதுண்டான கட்டுக்கடங்காச் சந்தோஷத்தால் தோள்களைப் பிடித்துக்கொண்டு "அப்பனே கிருஷ்ணா! 'காலவைரவ'னைப் (அந்தக் கிராம ஸ்தூல சரீரிகளெல்லாரும் சேர்ந்து அந்தக் கருநாய்க்கு 'கால வைரவன்' என்று பெயரிட்டிருந்தார்கள். காலன்—எமன். வைரவன்—நாய்) பணியும்படி செய்துவிடுகிறாயாமே!'' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போது கிருஷ்ணராவின் உள்ளத்தில் அநேக யூகங்கள் வெளிக்கிளம்பிக் கொண்டிருந்தன. வெங்கோபராயரைப் போன்ற கோபக்காரருக்குக்கூட தன்மீது அநுக்கிரகம் உண்டானதைப்பார்த்து "அதை இந்த மட்டில் விட்டுவிட்டேனா பாருங்கள் வேடிக்கை! காலை ஒடித்து மூலையில் தள்ளிவிடுகிறேன்'' என்று சொல்லிக்கொண்டு, சுபமுகூர்த்தம் மீறிப் போக விடாமலே—அதாவது வெங்கோபராயர் மனங்குளிர்ந்து தன் தோள்களைப் பிடித்துக்கொண்டிருக்கும்போதே நமது கிருஷ்ணராவ் அடியில் வருமாறு சொற்பொழிவு நிகழ்த்த ஆரம்பித்தான்: "மாமா! என் மனதுக்குள் ளிருக்கிற விஷயத்தைப்பற்றிச் சில வார்த்தைகள் தெரிவிக்கிறேன் கேட்கவேண்டும். இத்தனைநாள்வரை தங்களோடு சொல்லலாமென்றால் தைரியம் வரவில்லை நீங்கள் என்ன சொல்லிவிடுவீர்களோ வென்ற பயத்தால்'' எனச் சொல்லும்போது வெங்கோபராயர் முககமலம் விகசித்தது. இதைக்கண்ட கிருஷ்ணராவுக்கு மறுபடியும் கொஞ்சம் தைரியம் உண்டாகி "மாமா! வேறொன்றுமில்லை: இதோ உங்கள் துளசிபாய்! எங்கள் இருவருடைய விவாகத்துக்கும் தாங்கள் அநுமதிகொடுத்தால், எங்களிருவருக்கும் திருப்தி உண்டாக்கினவர்கள் ஆவீர்கள்'' என்று தட்டுத்தடையின்றி ஒரே யடியாகக் கூறி முடித்தான். இந்த மொழிகளைக் கேட்டபொழுது வெங்கோபராயர் முகத்தில் பெரிய மாறுதல் ஏற்பட்டது. இளஞ் சூரியகிரணங்களால் நிரம்பப்பெற்று கலகலவென்றிருந்த பூப்ரதேசத்தில் ஒருதரம் மப்புக்கட்டினதுபோ லிருந்தது. கோபம் வந்தது. இந்தக் கோபத்தில் கிருஷ்ணராவ் அவருடைய கைகளால் என்ன கதி அடைந்திருப்பானோ நமக்குத் தெரியாது; இதற்குள் கோபிநாதராயர் வார்த்தைகளால் இழுத்துக்கொண்டார். "இதில் பாதகம் என்ன இருக்கிறது? ஈடும் சோடும் வெகு வெகு பொருத்தம்; எனக்குப் பெண்குழந்தை இல்லாமல்போய்விட்டது; இருக்குமானால்—'' இதுவரைக்கும் சொல்லி, கோபிநாதராயர் மனைவிமீது ஒரு பயப்பார்வை போட்டு "கப்'' பென்று மௌனம் சாதித்து முகத்தைச் சுண்டவைத்தார். தமது மனைவியின் உத்தேசத்தைத் தெரியாமல், தம் மனதில் தோன்றின

தைத் தாராளமாக வெளியிட்டுவிட்டதற்கு அவர் இரக்கப்பட்டுக்கொண்டு எங்கே கோபித்துக் கொள்ளுகிருளோ என்று பயந்துகொண்டிருக்கும்போது லட்சுமிபாயம்மாள் சிரித்துக்கொண்டே "சந்தேகம் என்ன? எனக்குப் பெண்பிள்ளை இருந்தால் இந்த க்ஷணத்தில் நான் அவளை கிருஷ்ணராவுக்குக் கொடுத்துக் கலியாணம் செய்துவிடுவேன்!" என்ருள். கோபிநாதராயர் 'பிழைத்தேனப்பா' என்று சொல்லிக்கொண்டு நன்ருக மூச்சுவிடத் தொடங்கினர். கோபிநாதராயர் அவருடைய மனைவி—இவ்விருவருடைய வாக்கியங்களும் சமயத்தில் வெகு சுகமாய்வந்து உதவினதைப்பற்றி நமது கிருஷ்ணராவின் மகிழ்ச்சிக்கு அளவு எங்கே இருக்கிறது? காரியங்களெல்லாம் அநுகூலமாக நடந்துகொண்டிருப்பதற்கு தனக்குள்ளேயே ஈஸ்வரனை மனப்பூர்வமாக வாழ்த்திக்கொண்டிருக்கிருன்.

இத்தனை பேர், இம்மாதிரி தம்மீது படையெடுத்து வரும்போது வெங்கோபராயர் தனியாக என்ன செய்துவிடுவார்? அவர் முகத்தைத் திருப்பி மூலையிலிருந்த மகளைப்பார்க்கிருர். அப்போது துளசிபாய் முகத்தைக் கொஞ்சம் ஒரு பக்கத்துக்குத் திருப்பி, மந்தஹாசத்தோடு சுவற்றில் சுட்டுவிரலால் ஏதோ கீறிக்கொண் டிருந்தாள். துளசிபாயின் நோக்கங்கூட வெங்கோபராயருக்குத் தெரியவந்தது. விசாரணை முடிந்த பிறகு செஷன்ஸ் கோர்ட்டில் ஜட்ஜு அவர்கள் ஜட்ஜுமென்ட் கொடுப்பதுபோல் "இத்தனை பேர் சொல்லும்போது தவறிப்போகுமா என்ன? 'ஜனவாக்யம்து கர்த்தவ்யம்' என்று சொல்லி யிருக்கிருர்கள்; உங்களுடைய இஷ்டமே என்னுடைய இஷ்டமும்" என்ருர்.

அப்போது லட்சுமி பாயம்மாள் மூலையில் மகிழ்ச்சிப் புன்முறுவலுடனிருந்த துளசிபாயைக் கையைப்பிடித்துக் கொண்டுவந்து, அவளுடைய கையை கிருஷ்ணராவின் கையோடு சேர்த்து "இனி மேள தாளத்தோடும், மந்திரங்களோடும் நடக்கப் போகிற பாணிக்கிரஹண மஹோற்சவத்துக்கு இது ரிஹர்ஸ்" என்று தனது இங்கிலீஷ் பதப் பிரயோகத்துக்குப் பக்கத்தில் சிரித்தாள். * * *



வைகாசி மாதத்தில் ருஷ்ணராவ்—துளசிபாய் கலியாணம் நடந்தது. கலியாணத்தில் தாசில்தார் கோபிநாதராயர் அவர்கள் மாப்பிள்ளை கிருஷ்ணராவ் பேருக்குஆயிரம் ரூபா கட்ணம் சமர்ப்பணம் செய்தார்கள். (என்ருல் பெண்டாட்டியின் அநுமதி பெற்றுக் கொண்டு). கிருஷ்ணராவ் துளசிபாய் ஆயுள் ஆரோக்கியத்துக்கும், சந்தான விருத்திக்கும் அவர்களை நாமுங்கூட ஆசிர்வதிப்போமாக.




## வேம்பின் குணம்.

(218-ம் பக்கத் தொடர்ச்சி.)

(டாக்டர். மே. மாசிலாமணி முதலியார்.)

கால் படி ஜலத்தில் அரைப்பலம் வேப்பம்வேர் சேர்த்து அரைக்கால் படியாகச் சுண்டக்காய்ச்சிக் கஷாயம் வைத்துக் காலை மாலை 1 அவுன்ஸ் வீதம் சாப்பிட்டால் பித்த உன்மத்தம் நீங்கும்; நரம்புகளுக்குப் பலம் உண்டாகும்; இரத்தம் சுத்தியாகும்.

பட்டையின் தூளோடு சமபாகம் சர்க்கரை சேர்த்துக் காலை மாலைகளில் 20 முதல் 40 கிரெயின்ஸ் வரையில் உட்கொண்டால் ஒரு மண்டலத்தில் சருமரோகங்கள் நிவர்த்தியாகும். இரத்தம் சுத்தியாகும். புத்தி கூர்மையடையும். நாட்பட்ட 100-வருஷத்திய மரத்தின்பட்டை மிகவும் நல்லது. 100 வருஷத்திய மரத்தின்பட்டை இனிமையாயிருக்கும். மனம் ஒருமையடையச் சாதனை செய்வோர் உட்கொண்டால் மனச் சோர்வின்மையோடு புத்திசூட்சமமும் பெற்று அவர்கட்கு மனவொருமையும் விரைவில் சித்திக்கும். கால் படி ஜலத்தில் 1 பலம் பட்டையை இடித்துச் சேர்த்து அரைக்கால் படியாகச் சுண்டக் காய்ச்சிக் கஷாயம் வைத்துக் காலை மாலைகளில் 2 அவுன்ஸ் வீதம் சாப்பிட்டுவந்தால் விஷ ஜுரம், நாட்பட்ட ஜுரம் ஆகிய இவைகள் நீங்கும். இரத்தசுத்தியும் உண்டாகும். பட்டையை லேகியங்களிலும் சேர்க்கலாம். இளமரத்துப்பட்டை நல்லதல்ல. சுமார் 60 வருஷத்துக்கு மேற்பட்ட மரத்தின் பட்டையானது சருமவியாதிகளை நிவர்த்திசெய்யும். 100 வருஷத்திற்கு மேற்பட்ட மரத்தின்பட்டை மிகவும் சிரேஷ்டம். 100 வருஷத்திய வேப்பமரத்தின் பட்டையை 10 பலம் எடுத்து நன்ருக இடித்து 2 படி ஜலம்விட்டு ஒரு மண்பாண்டத்தில் 12 மணிநேரம் ஊறவைத்து இதனோடு நிலவேம்பு 5 பலம், பற்பாடகம் 2 பலம், தோஷ்டம் 2 பலம், அதிவிடயம் 1 பலம், சுக்கு 1 பலம், பரங்கிச்சக்கை 2 பலம் ஆகிய இவைகளை இடித்துப் போட்டு 1 படியாகச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி எடுத்துக்கொண்டு காலை மாலைகளில் 1 அவுன்ஸ் முதல் 2 அவுன்ஸ் வரை உட்கொண்டால் விஷஜுரம் 10 நாட்களில் குணமாகும். மறுபடியும் வராது. கொய்னாகூட மறுபடியும் ஜுரம் வரச்செய்யும். ஆனால் குறைந்த அவுன்ஸ் கொய்னாவைச் சாப்பிட்டால் 10 நாட்களுக்குரிய கஷாயத்தின் வேலைசெய்யும். நாள்தோறும் கஷாயத்தைச் சூரிய ரஸ்மியில் வைக்கவேண்டும். இல்லையேல் பூசணம் (பூர்ணம்) பிடித்துப் புளிப்பேறிவிடும். இதற்குப் பதிலாக மேற்சொல்லிய ஒருபடி கஷாயத்தில்

10 பலம் நல்ல வெல்லமும் 5 பலம் காட்டாத்திப் பூவும் கலந்து சீலைமண் செய்து 15 நாள் பூமியில் வைக்கத் திராவகமாக மாறிவிடும். அல்லது ஓர் அறையின் மூலையில் 40 நாள் அசையாமல் வைக்கத் திராவக மாகிவிடும். இதைத்தான் அரிஷ்டம் என்பார்கள். இத்தகைய அரிஷ்டத்தை நாளொன்றுக்கு 3 அல்லது 4 முறை வேளைக்கு கால் அவுன்ஸிலிருந்து 1 அவுன்ஸ் வரை உட்கொள்ளலாம். இம்மருந்து இரத்தத்திலுள்ள விஷக் கிருமிகளைக் கொன்று இரத்த விருத்தியையும் இரத்த சுத்தியையும் உண்டாக்கும். இரத்தக் கெடுதியால் உண்டாகும் சொறி சிரங்கு, படை முதலிய வியாதிகளைப் போக்கும். மூளைக்கும் பலம் தரும்.

மூளைக்குப் பலம் தருவதில் மரப்பட்டையைவிட வேரின்பட்டை உயர்ந்தது. பட்டையைக் காட்டிலும் வேர் சற்றுத் தீவிரமாய் வேலை செய்யக் கூடியது.

வேரும் பட்டையும் கல்லீரலிலும், மண்ணீரலிலும், இரத்தத்திலும் வேலைசெய்யக்கூடியன. இவற்றைச் சிலர் வியாதிகள் வராமல் தடுக்குமென்று சர்க்கரையோடு கலந்து சாப்பிடுவதுமுண்டு. இம்மருந்தைக் கற்பமென்றும் சொல்லுவார்கள்.

வேப்பம்பழத்தின் மேல்தோல் மஞ்சளாயும் உட்புறம் ஒருவித வெள்ளை நிறமாயும் இருக்கும். இப்பழங்களைக் காகம், வௌவால் முதலிய பட்சிகள் சாப்பிடும். இதன்தோல் கசப்பாகவும் பழம் சிறிது கசந்த இனிமையாகவும் இருக்கும். இப்பழத்தைப் பிழிந்து தோலை எடுத்துவிட்டு 10 பலம் சத்துடன் பிஸ்தா பருப்பு 1 பலம், பாதாம் பருப்பு 1 பலம், சுரை விதை 1 பலம், காசினிவிரை 1 பலம், வெள்ளரிவிதை 1 பலம், பனப்ஷா 1 பலம், சும்புலடிப் 1 பலம், தனிய 1 பலம், கர்பூஜ்விதை 1 பலம், சோம்பு 1-பலம், கித்மி விரை 1-பலம், அதிமதுரம் 1 பலம், கொஸ்ப்பான் புஷ்பம் 1 பலம், விரை திராட்சை 6 பலம் ஆகிய இவைகளுள் தூள் செய்யவேண்டுவனவற்றைத் தூள் செய்தும், அரைக்கவேண்டுவனவற்றை அரைத்தும் சேர்த்துக்கொண்டு 1 வீசை கற்கண்டும் ½ வீசை நெய்யுங்கூட்டி லேகியம் கிளறி கழற்சிக்காய் முதல் கொட்டைப்பாக்கு அளவு வரை உபயோகித்துவந்தால் நாட்பட்ட சுரம், சன்னிபாதசுரம், க்ஷயரோகம், சூதகவாய்வு முதலிய ரோகங்கள் நிவர்த்தியாவதோடு இருதயத்திற்கும் மூளைக்கும் பலம் ஏற்பட்டு தாதுபுஷ்டி உண்டாகும். இம்முறை பண்டைக்காலத்து நவாப்புகளால் பெரிதும் கொண்டாடப்பெற்று உபயோகிக்கப்பட்டதாகும். இவற்றையே ஷர்பத்தாகக் காய்ச்சுவது முண்டு. ஷர்பத்துக் காய்ச்ச மேற்கூறிய வஸ்துக்களை நன்றாக இடித்து 6 படி ஜலம்விட்டு 1 படியாகச் சுண்டக்காய்ச்சி எடுத்துக் கொள்ளவேண்டும். வேளை 1-க்கு ½ அவுன்ஸ் வீதம் நாளொன்றுக்கு 3 முறை கொடுக்கலாம். சன்னிபாத சுரங்களுக்கு 4 மணிநேரத்திற்கொருமுறை கொடுக்கலாம். இதை உபயோகிப்பதால் சன்னிபாத சுரங்களில் ஐஸ் வைக்க வேண்டிய பிரமேயம் ஏற்படாது. 102 டிக்கிரிக்குமேல் போகாமல் சுரத்தைத் தடுத்துவிடும். 22 நாட்களுக்குள் சுகமா யிருக்கக் காணலாம். மேலே குறிப்பிட்ட வியாதிகளுக்குங் கொடுக்கலாம்.

விதை பித்தத்தை உண்டாக்கக் கூடியது. இதிலிருந்து நெய் எடுக்கலாம். விதையோடு கஸ்தூரி மஞ்சள், வெள்ளை மிளகு, நெல்லிவித்து, கடுக்

காய்தோல் ஆகிய இவைகளைச் சமமாய்த் தூள்செய்து பாலிலரைத்துத் தலையில் தேய்த்து ஸ்நானம் செய்தால் மூளைக்குக் குளிர்ச்சி உண்டாகும். கண் எரிச்சல் நீங்கும். எண்ணெய் ஸ்நானம் செய்வதால் உண்டாகும் பலனை விட இந்த ஸ்நானத்தால் விசேஷ பலனைக் காணலாம். அதுவும் ஒரே தடவையில் தெரியவரும். தமிழ்நாட்டுச் சந்நியாசிகள் பெரும்பாலும் இதையே மாதம் ஒருமுறை தேய்த்து ஸ்நானம் செய்கிறார்கள். இதைப் பஞ்சகற்ப ஸ்நானம் என்று சொல்லுகிறார்கள்.

வீடுகளில் புஷ்பத்தை அநேகநாட்கள்வரை உலர்த்தி வைப்பதுண்டு. நெய்யில் வதக்கிய புஷ்பத்துடன் புளி, மிளகு, உப்பு, சீரகம், கருவேப்பிலை ஆகியவைகளைச் சேர்த்துத் துவையல் செய்து மருந்தாகவும் உணவுப் பொருளாகவும் உபயோகிக்கிறார்கள். சிலர் துவரைப்பருப்போடு சேர்த்து சாம்பார் செய்து பித்த சாந்திக்காக ஆகாரத்துடன் உட்கொள்ளுவார்கள். ரசமும் வைப்பதுண்டு. மற்றுஞ் சிலர் கஷாயமாகச்செய்து காலை மாலைகளிற் சாப்பிடுவார்கள். புஷ்பத்தையும் மிளகையும் நெய்யில் வாட்டி அரைத்துக் குழந்தைகளுக்கு வாரத்திற் கொருமுறை ஸ்நானம் செய்யும் தினத்தில் தாய்மார்கள் சுண்டைக்காயளவு கொடுப்பார்கள். இதனால் குழந்தைகளின் வயிற்றிலுள்ள கிருமிகள் நாசமடையும்.

புஷ்பத்தாற் செய்யப்படும் மேற்கூறிய மருந்துகள் கல்லீரலிலுண்டாகும் பித்தத்தைச் சாந்திசெய்யும். வயிற்றிலுள்ள கிருமிகளை அழிக்கும். மலத்தைத் தள்ளும்.

கொட்டையில் 100க்கு 32 பங்கு எண்ணெய் கிடைக்கும். இந்த எண்ணெய்க்கு இரணத்தை ஆற்றுங் குணமுண்டு. புரையோடிய இரணங்களுக்குள் கண்ணாடி ஸ்ரிஞ்சு மூலம் எண்ணெயை உட்செலுத்தினால் இரணம் ஆறிவிடும். பாரிசவாய்வுகள் வேப்பெண்ணெயும் பெட்ரோலும் சமமாகக் கலந்து தேய்த்தால் குணமாகும். தென்னாட்டில் வேப்பெண்ணெயைச் சரீரம் முழுவதும் தேய்த்துக்கொள்ளுவார்கள். முக்கியமாய் தன வைசிய வகுப்பைச் சேர்ந்த பெண்கள் வேப்பெண்ணெயையே தலைக்குத் தேய்த்து ஸ்நானம் செய்வார்கள்.

குழந்தைகளுக்கு வேப்பெண்ணெயைப் பலவித வஸ்துக்களிற் கலந்து கொடுப்பார்கள். வேப்பெண்ணெய் மலத்தைத் தள்ளக்கூடியது. கல்லீரலிலும் இரத்தத்திலும் வேலை செய்யக் கூடியது. கசப்புள்ளது.

1 வீசை வேப்பெண்ணெயில் 1 வீசை வெள்ளைப்பூண்டின் ரசமும் 1 பலம் பொரித்த பெருங்காயத்தூளும் 50 கோழி முட்டைகளின் மஞ்சட் கருவும் சேர்த்துக் காய்ச்சிக்கொள்ள வேண்டும். கோழி முட்டையின் மஞ்சட்கருவைத் தனியாக ஒரு பாத்திரத்தில் போட்டு கிளறிக்கொண்டே வந்தால் கருப்பு நிறமாகமாறி எண்ணெய் கசியும்; இந்தப் பதத்தில் மேற்சொல்லிய வஸ்துக்களையும் எண்ணெயையும் கூட்டிக் காய்ச்ச வேண்டும். நெருப்பில் ஒருதுளி எண்ணெய் விட்டால் சிடுசிடுப்பில்லாமல் இருப்பின் பதம் என்று அறிந்து இறக்கி ஆறவிட்டு வடிகட்டிப் புட்டியில் பதனம் பண்ணி வைக்கவும்.

குழந்தைகளுக்கு 15 துளி முதல் 60 துளிவரை காலையிலும் 10 முதல் 30 துளிவரை மாலையிலும் முலைப்பாலிற் கலந்து கொடுத்தால் மாந்தம் என்

னும் கல்லீரலின் வீக்கம் குறையும் 1 தடவை அல்லது 2 தடவை பேதியு மாகும். மந்தத்தால் காணும் வலி நீங்கும். ஆனால் அதிக சுரத்தால் காணும் வலி நிவர்த்தியாகாது. அத்தகைய வலிகளுக்குச் சுரத்தைக் குறைப்பதற் குரிய மருந்துகளையும் மேல் போடும் சிகிச்சைகளையும் செய்துகொள்ள வேண்டியது.

இந்த எண்ணெயில் 1 முதல் 2 அவுன்ஸ் வரை எடுத்து 1 குண்டுமணி எடை கஸ்தூரியையுங் கலந்து 3 நாள் காலை மாலைகளிற் கொடுக்க சுகஜன்னி நீங்கும். பேச ஆரம்பிப்பார்கள். பாரிச வியாதிகளுக்கும் இதை உபயோகிக்க லாம். காலையில் இந்த எண்ணெயைத் தேய்த்து ஸ்நானம் செய்தால் (2 அல் லது 3 ஸ்நானங்களுக்குள்) எத்தனையோ வருஷம் கஷ்டம் கொடுத்து வந்த ஒற்றைத்தலைவலி பிடரிவலி முதலியன நீங்கிவிடும். ஸ்நான தினத்தில் மிளகு ரசம் சாதம் சாப்பிட வேண்டும். வேறு எத்தகைய வஸ்துக்களையும் உட் கொள்ளலாகாது. அன்றைய தினம் பகல் நித்திரையுங் கூடாது. இந்த எண் ணெயைச் சிறிது சூடேற்றிக் காதில் அடிக்கடி விட்டுவர காது குத்தல் உடனே நீங்கும். சில நாள் உபயோகித்தால் காதிலுள்ள இரணங்கள் ஆறிச் சீழ்வடிதல் நின்றுவிடும்.

இந்த எண்ணெயை அண்டத்தைலம் என்று சொல்லுவார்கள். சில வைத்தியர்கள் இந்த எண்ணெயைக் காய்ச்சும்போது இதனோடு 1 பலம் சுத்திசெய்த நேர்வாளத்தை அரைத்துக் கலக்கிக் காய்ச்சுவார்கள். இது அதி கம் பேதியாகச் செய்யும். குழந்தைகளுக்குக் காலையில் 1 வேளையே உப யோகித்தல் வேண்டும். 5 முதல் 30 துளிவரை கொடுக்கலாம். இம்மருந் தைக் காதுக்கும் தலைக்கும் உபயோகிக்கக்கூடாது.

சாதாரண வேப்பெண்ணெயும் மஞ்சளின் குழித்தைலமும் சேர்த்து இரணங்களுக்கும் பாரிச வாய்வுகளுக்கும் உபயோகிக்கலாம். இவ் வெண் ணெயில் ஒருதுளி நெருப்பில் விட்டுப் புகையை உட்கொண்டால் சளிப்பு, தொண்டைப் புண் ஆகிய வியாதிகள் நீங்கித் தொண்டைக் கம்மல் வாங்கும்.

வேப்பம் பிசின் சிறு கசப்புள்ளது; சிவப்பு நிறமுள்ளது. இதை இரத்த பேதியிலும் சீதபேதியிலும் உபயோகிக்கலாம். அரை அவுன்ஸ் சுத்த ஜலத் தில் 1 பலம் பிசினை ஊறவைத்து அதன் தெளிவை வேளைக்கு 1 அவுன்ஸ் வீதம் நாளொன்று 3 அல்லது 4 முறை கொடுக்கலாம். எத்தகைய காரமும் சேர்க்கலாகாது. இதைத் தாதுவிருத்தி லேகியங்களிலும் சேர்த்து உபயோ கிக்கலாம். இது துவர்ப்புள்ளது; இரணங்களை ஆற்றக்கூடியது; தாது விருத்தி செய்யக்கூடியது.

வேப்பங் கள் இரண்டு வகைப்படும். 1. நாட்பட்ட மரங்களிலிருந்து இரண்டு மூன்று நாள் சப்தம் உண்டாகித் தானாகப் பால் வடிவது. இந்தப் பால் 4 அல்லது 5 நாள் வரை வடியும். 2. நமது முயற்சியால் தென்னங்கள் பனங்கள் இறக்குவதுபோல் இறக்கப்படுவது. இந்தக்கள்ளை உட்கொண்டால் மயக்கம் முதலான துற்குணங்கள் நிகழா. இக்காரணத்தால் இதைச் சிலர் கள் என்னாது பால் என்று சொல்லுவார்கள்.

---

# ஆனந்த சந்திரோதயம்.

S. V. V.

"**பூனை கண்ணை மூடினால் பூலோகமே அஸ்தமித்துவிடுமா**" கடவுள் இல்லையென்று நாஸ்திகர்கள் வாய்மதம் பிடித்துப் பிதற்றினால் கடவுளில்லாமற் போய்விடுவரோ? தண்ணீரில் நாம் கண்ணாற் பார்க்கக்கூடாத பரமாணுக்கள் போன்ற கிருமிகளுள்ளன; ஜலத்தில் கிருமிகளே யில்லையென்று அறியாமையால் சாதிப்போர் பூதக்கண்ணாடியாற் பார்த்து ஒப்புவதுபோல, அறநூல்களாகின்ற தூரதிருஷ்டிக் கண்ணாடியால் நமது ஊனக் கண்ணுக்குப் புலப்படாத கடவுளைக் கண்டு தரிசிக்கலாம். குருடன் எதிரிலுள்ள மனிதனைப் பார்க்க வியலாவிடில் அது கண்ணின் குற்றமேயன்றி முன்பாகவுள்ள அம் மனிதனின் குற்றமல்ல; அதுபோல இறைவனில்லையென்பதற்கு நமது மனக்கண் பார்வை யிழந்திருப்பதே காரணமாகும். ஐம்புலன்களின் இயக்கமின்றேல் நாம் இன்பமடைய முடியாது. செவிடர்களால் ஈஸ்வர நாமத்தையும் சங்கீதத்தையும் கேட்டின்புற முடியாது. அதனால் பகவந்நாமமே இல்லையென்றும் சங்கீதமென்பதே கிடையாதென்றும் புகலின் அது ஒக்குமோ? பித்த அதிகரிப்பால் தேம்பாகு கசப்பாயிருக்கிறதென்று ஒரு நோயாளி கூறின், அது அவன் நாவின் குற்றமேயன்றி, தேம்பாகிற்குள்ள சுவை வேறுபாடல்லவே? அதுபோலவே, ஞானேந்திரியங்களை அகந்தையென்னுந் திரையால் மறைத்து, எல்லாம் இயற்கையென்றும் கடவுளென்பதே சூன்யமென்றும் பேசித்திரிவதனால் இறைவனது திவ்ய அனந்த கல்யாண குணங்களையும், அவனை வழிபட்டு மோக்ஷப் பிரசாதிகளாகிய அடியார்களின் பெருமைகளையும் லட்சியம் செய்யாமல் சூன்யவாதஞ் செய்யுமவன் ஞான சூன்யனாகிப் பிறவிப்பயனை எய்தாதொழிகின்றான். இதுபோலவே எல்லா விஷயங்களிலும் உண்மையை ஆராய்ந்தறியாது மதம் பிடித்தலைபவர் அந்தகாரமென்னும் படுகுழியில் வீழ்வர். ஞானவான்கள் இம்மை மறுமை இன்பங்களையெய்தி வாழ்வர்.

***

"**கஷ்டப்பட்டவனுக்குத் தெரியும் காசருமை**" என்று நாம் அடிக்கடி சொல்லுவது வழக்கம். அதுபோல, காடுமலைகளிலெல்லாம் அல்லும் பகலும் அலைந்து திரிந்து, உணவின்றி உறக்கமின்றி தங்க இடமின்றி, புண்ய நதிகளில் நீராடி, திவ்ய தேசங்களைச் சுற்றி, அகற்ற ஒண்ணாத காம காஞ்சனம் (பெண் பொன்) ஆசைகளை வைராக்கியமென்னும் ஓர் வாள்கொண்டு வீசி, சிவ நாமங்களை அனவரதம் துதித்துக்கொண்டு, மலைக்குகைகளில் தனித்துப் பல்காலமாய்த் தவமியற்றும் மகான்களைத் தரிசித்து ஞானோபதேசம் அடைந்து 'காணலாகும் நாதனைக் கடந்துநின்ற ஜ்யோதியைத்' தரிசித்த மகான்களுக்கே ஞான காண்டத்திலுள்ள கஷ்டம் தெரியுமேயன்றி 'கோவிலுக்குப் போனாற்றான் கடவுளா? மனத்தகத்தே அவன் விளங்கவில்லையா?' என்று வீண் வாசாஞானிகளாய்ப் பேசித்திரியும் மாந்தர்கள் அறிவரோ? பாடுபட்டுப் பைசாபைசாவாக இலக்ஷ ரூபா சேர்த்து வைத்தவனுக்குத்தான் காசருமை தெரியுமேயன்றி, மூதாதையர் ஈட்டிவைத்த பொருளை சுகவாசியாய் ஊதாரியாய்ச் செலவிடுகிறவனுக்கு அதன் பெருமை தெரியாது. வேத வேதாந்தங்களைப் படித்துப் பிரசங்கஞ் செய்வதால் மட்டும் பலன் கிடைத்துவிடுவதில்லை. அம்மறைகளிலுள்ள ஒரு சொல்லின் பொருளையேனும் மெய்

யாக அனுபவித்தால்மட்டும் அந்த ஆனந்த நிலை இன்னதென்று புலப்படும். ஆதலின், பெரியோரைப் பழிக்காமல் ஆலய வழிபாட்டை அலட்சியம் பண்ணாமல், 'ஆலயம் புகுவது சாலவும் நன்றெ'ன்று கொண்டு அதனால் ஆத்ம வளர்ச்சியும் மனத்தெளிவும் ஏற்படுமென்ற நம்பிக்கையுடன் நாம் இறைவனை வழுத்தி அடியார்மாட்டு அன்பு செலுத்துவோமாக.

***

**"அத்வைத மதம்"** கடந்து நிற்றல் என்னும் பொருள்பட விளங்கும் 'கடவுள்' ஒருவரே உலக காரணராயும் இவ்வுலகமாயும் உள்ளவர். படைப்புத் தொழிலைப் புரிகின்றவரும் சிருஷ்டித் தொழில் செய்பவரும் சங்காரத் தொழில் செய்பவரும் அவரே யாவர். அவரே இவ்வுலகமு மாகின்றார். அத்வைதம் இங்ஙனமே கூறுகின்றது. நமது கட்புலனாலறியப்படும் உலக மென்பது உண்மையில்லை. உலகமும் அதனுள் நீ, நான், உனது, எனது என் பவை யாவும் பொய். இவையனைத்தும் மாயையின் தோற்றங்களே யாகும். ஒன்றே யுண்டு. அதுதான் கங்குல் பகலற நின்று ஞானிகளின் கருத்துக் கிசைந்த தன்மையது. அது அகண்டமானது; என்றும் நிலவுவது. இம் மாயை யுலகில் நாம் எத்தனையோ கனவுகள் காண்கின்றோம். இவ்வுலகமும் அத்தகையதே. ஆனால் சத்தியமானது அந்த சுத்தப் பரப்பிரம்ம மொன்றே. அதுவே வீடுவாசல், சூரிய சந்திரர், புஸ்தகம், பொருள், பூமியாகிய அனைத்து மாகும். பெயரும் வடிவமுமே பொருள்களுக்குப் பேதாபேதத்தைக் கற்பிப் பவை. சருக்கரை ஒன்றுதான்; ஆனால் அதனாற் செய்யப்படும் மிட்டாய் களுக்குப் பெயரும் உருவமும் வேறாயிருக்கின்றன. ஆகவே, நாமரூபங்களை அகற்றிப்பார்த்தால் பொருள் **ஒன்று** என்பது விளங்கும்.

***

**"அரசமரத்தைச் சுற்றியதும் அடிவயிற்றைத் தடவிப் பார்த்தாள்"** என்று சொல்வது வழக்கம். அதுபோல எந்தக் காரியத்திலும் சிறிது முயன்று உடனே பெரும்பலனை எதிர்பார்ப்பது அறிவீனரின் செயல். ஒருவேளை மருந்துண்டதும் நோய் நீங்கவில்லையே என்று குறை கூறுவது தகாது. சில வியாதிகள் ஒருவேளை மருந்தால் நீங்கும்; சில, பலநாட்களும் மாதங்களும் மருந்து சாப்பிட்டால் மட்டுமே அகலும். ஆதலின் பிணிபோம்வரை மருந்து கொள்பவனே புத்திசாலியாவான். ஆகையால், அறிவாளிகள் தமது ஆன்மா விற் கேற்பட்டுள்ள அழுக்கும் பந்தமும் அகலும் வரை இடையறாது மனந்தள ராமல் பாடுபடுகிறார்கள்; பலனெய்துகிறார்கள். மருந்தையும் வைத்தியரை யும் அவசரப்பட்டு அடிக்கடி மாற்றுபவர் அநேகமாக குணமடைவதில்லை. அதுபோல அடியார்கள் பக்தி, ஞானம், கர்மம், யோகம் ஆகிய நான்கு வைத்தி யர்களில் எவரை முதலில் துணையாகக் கொள்கிறார்களோ, அவர்களுதவி யைக்கொண்டே முடிவுவரையிலும் முயலுகிறார்கள்; சில மருந்துகளுக்கு விரைவில் நோயைப் போக்கும் குணமுண்டு; சில நாட்போக்கில் நோயை நீக்கும்; ஆகவே மருந்துக்குப் பிணியைப்போக்குந் தன்மையுண்டு. அதுபோல கிறிஸ்தவ, வைண, சைவ, பௌத்த, முகம்மதியமாகிய எல்லாச் சமயங்களும் இறைவனை யெய்துவிக்கும். ஆனால், ஒன்று விரைவிலும், ஒன்று காலக்கிர மத்திலும் அடையச் செய்யும். சில ஔஷதங்கள் தித்திப்பா யிருக்கும்; சில கைக்கும்; சில துவர்க்கும்; அதுபோன்று சில சமய தர்மங்கள் கஷ்ட மான முறைகளாக விருக்கும்; சில துன்பத்தின் முடிவான—எல்லையான இன்பத்தைத்தரும். ஆகையால், எதையும் தொடங்கியதும் பலனுக் காசைப்

படாமல் நம்பிக்கையோடும் பொறுமையோடு மியற்றுபவர் நன்மையான பலனை யடைவது திண்ணம்.

**"ஆத்மாவின் தன்மை"** ஆணுமன்று, பெண்ணுமல்ல, அலியுமாகாது. ஒவ்வொரு பொருளிலுமுள்ள நாமரூபங்களை நீக்கிப்பார். அப்போது அதன் அபேதநிலை புலனும். 'நாற்காலி' என்ற பெயரையும் ரூபத்தையும் நீக்கிப் பார்த்தால் 'மரம்' என்னும் ஒன்றே விளங்கும். இப்படிப்பட்ட பேதம் தோன்றுவதற்கு மாயையே காரணமாகும். இவ்வாறு நாமரூபங்களைப் பிரித்துப்பார்த்தால் சகல பொருள்களும் ஒன்றேயென்று நன்றே யறியலாம். இரண்டென்னும் எண்ணமே அப்பொழுது நசித்துப்போய் விடும். ஆகவே ஆன்மா ஒன்றே யுண்டு. மற்ற ஊர்வன முதலிய யாவும் கனவின் பாற்பட்டவைகள். ஆதலால், நான் என்பதும் நீ என்பதும் ஒன்றே. இந்த ஞானம் கைவரப்பெற்ற விடத்து இவ்வுலக மென்பது அதன் பொருள்களோடு நசிக்கும். பிரம்ம மொன்றேயன்றி, ஏனைய சிருஷ்டியும் உலகமும் இலவாகும். நாம ரூபங்கள் யாவும் அப்பாரப்பிரம்மத்தினின்றே உண்டாகின்றன; அங்கேயே முடிகின்றன. இவை ஞானிகளுக்கில்லை. நாம் நமது கண்களைக் கண்ணுடிகொண்டே பார்த்தல்போல, பரப்பிரம்மத்தை நாம் அதன் பிரதி பிம்பமாகிய உலகமென்ற கண்ணுடியால் உணரலாம். ஆனல் கண்ணுடியிற் காணப்படும் நமது கண்கள் உண்மையாகாவாறுபோல பரப்பிரம்மத்தின் சத்தியத்தைக் காணுதற்கான இவ்வுலகமும் உண்மையன்று. அவ்வாருயின் கண்ணுடியில் நாம் கண்களைக் கண்டது பொய்யா? என்ற வினவெழும். இந்த உலகம் பொய்யே யொழிய அதை நாம் பார்ப்பது பொய்யன்று. ஆதலின் உலகம் பொய்யுமல்ல மெய்யுமன்று. அதை இன்னதென் றியம்பவும் முடியாது—**'அநிர்வசனீயம்'** என்று ஆன்றோர் கூறுவர். ஆத்மா பரிசுத்தமானது. தூயகண்ணுடியில் பவ்வீயைப் பார்த்தால் பவ்வீயாகவே தோன்றும். அப்படித் தோன்றுவது கண்ணுடியின் குற்றமல்ல. ஆதலால், ஆத்மா ஒன்றேயாயினும் இயக்க வேறுபாட்டால் மனிதர்கள் தத்தம் கர்மானுஷ்டான வித்யாசத்தால் பற்பலவாறு காணப்படுகிறுர்கள்—இது அத்வைத மதப்பிரதிஷ்டாபனரான ஸ்ரீசங்கரரின் ஆன்மதத்துவோபதேசம்.

# துருவதேச இயற்கை மக்கள்.

(S. வேங்கடசாமி நாயுடு.)

பூமி உருண்டை வடிவானது. இதைக் கோள மென்றும் அண்ட மென்றுங் கூறுவர். இந்த கோளத்தின் தென்கோடி முனைக்குத் தென் துருவ மென்றும், வடகோடி முனைக்கு வடதுருவ மென்றும் பெயர். தென் துருவத்தைச் சுற்றிலுமுள்ள பிரதேசத்திற்குத் தென் துருவப் பிரதேச மென்றும், வடதுருவத்தைச் சுற்றிலுமிருப்பதற்கு வடதுருவப் பிரதேச மென்றும் சொல்வார்கள். இப்பாகங்களில், சூரிய சந்திர கிரணங்கள் மத்திய பூபாகங்களிற் படுவதுபோல் படுவதில்லை. ஒவ்வொரு நாளிலும் இரவு பகல் உண்டாவ தில்லை. ஒரு வருடத்தில் ஆறுமாதங்கட்கு எப்போதும் சூரிய வெளிச்சமே இடைவிடாம லிருக்கும். அவ்வமயம் அப்பிரதேசத்தைச் சூரியலோகம் (The Land of Midnight Sun) என்று சொல்லலாம். மற்றை ஆறுமாதங்களில் பயங்கரமான காரிருள் துருவ தேசத்தை முழுதும் கவிழ்ந்து கொள்ளும். சீதோஷ்ண ஸ்திதி 0 டிக்ரிக்கும் கீழே தணிந்துவிடும். எங்கு பார்த்தாலும் பனிப் பாறைகளும் பனி மலைகளுமாக அங்கிருக்கும் கடல் நீருறைந்துவிடும். குளிர் மிகுதியால் மனிதர்கள் அங்கு வசிக்கவும் முடியாது. அநேகமாக விலங்கு புள்ளினம் முதலியவைகளும் அங்கு வசிப்பதாகத் தெரியவில்லை. இரண்டொரு ஜாதி நீர்வாழ் ஜந்துக்களும், போலார் கரடிகளும், சில பறவைகளுமே அங்கு வசிக்கின்றன. இத்தகைய தேசத்தைப்பற்றிய விவரணங்களை நெடுநாட்கள் வரை கண்டறிந்து வந்து சொன்னவர்களொருவருமில்லை. ஆயிரக்கணக்கான மைல்தூரம் சென்று துருவ தேசத்தைப் பார்க்கப்போனவர்கள், குளிராலும் பசியாலும் வருந்தித் திரும்பிவர முடியாமலிறந்தனர். பத்தொன்பதாமாண்டி னிறுதியிற்றான் சில பிரயாணிகள் துருவ தேசத்திற்குச் சென்று அங்குள்ள அற்புதங்களைக் கண்டுவந்து நமக்குத் தெரிவித்திருக்கின்றனர். பனிமயமாகிய இத்துருவ தேசத்திலும் மானிடர் வாழ்கின்றன ரென்றால் இதைக் கேட்போர்கள் அதிசயப்படாமலிரார். நாகரிக உலகத்தில் வாழும் நமக்கும், துருவ தேசத்தில் வாழ்பவர்கட்கும் அநேக வித்தியாசங்க ளுண்டு. தற்கால மனிதவாழ்வை நோக்குமிடத்து அவர்களை மனிதர்களென்று சொல்ல இயலாது. இயற்கையாயமைந்துள்ள இடங்களில் குடியிருந்து கொண்டு இயற்கைப் பொருள்களைத் தின்று ஜீவிக்கும் ஒருவகைப் பிராணிகளென்றே சொல்லவேண்டும். அப்பிரதேசத்தில் வாழும் ஒருவகைப் பறவை, வால்ரஸ் (Walrus) என்னும் நீர்வாழ் ஜந்து, பனிப் பாறைகளிலும் மற்ற இடங்களிலும் வசிக்கும் ஒருவகை விலங்கு இவைகளே இவர்களுக்குரிய உணவாகும். குளிரும் பனியும் அங்கு மிகுதியானதால் மேற்சொன்ன பிராணிகளின் கறியைச் சமைக்க அங்கு தீயெரிக்கவும் முடியாது. அங்ஙனம் எரிப்பதற்கு விறகுங் கிடையாது. எல்லோரும் பச்சைக்கறியைத்தா னுண்டு வாழ்வார்கள். தற்காலம் அவ்விடங்களில் காணப்படுவோர் ஒவ்வொரு சமயம் தீ யெரிக்கத்தகுந்த ஒருவகை எண்ணெயை உபயோகப்படுத்திக் கொள்கின்றனரெனத் தெரிகிறது. இவர்கள் உணவருந்துவதைப் பார்க்க மிக விநோதமாயிருக்கும். மாமிசத்தை வால்ரஸ் என்னும் விலங்கின் கத்திபோன்ற கொம்புகளைக் கொண்டறுத்து நீளமான அந்தக்கறியின் ஒரு முனையை வாயிற்கடித்துத் தின்பார்கள். அத்துண்டைத் தின்றதுபோக மீதிப்பட்ட பாகத்தை இரண்டாமுறை உணவுக்

கென வைத்துக் கொள்வார்கள். அங்கு வாழும் மனிதர்கள் பனிக் கட்டிகளைக் கொண்டு வீடுகளாகக் கட்டிக்கொண்டும், பனிக்குன்றுகளைக் குடைந்து, அக்குகைகளை வீடுகளாகக் கொண்டும் வசித்து வருகின்றனர். மிகுந்த குளிரான விடங்களில் அதாவது பனித்தரைகளில் நடுவில் இடம் விட்டுச் சுற்றிலும் 10, 15 அடி ஆழமான குழி தோண்டுவார்கள். குழிக்கு மத்தியிலுள்ள குன்றைப்போன்ற பனித்திட்டினுள்ளே குடைந்து அதை ஒரு வீடாக்கிக் கொள்வார்கள். இவ்வீட்டி னுட்புறத்தில் வெப்பமாகவும், வெளிப் புறத்தில் குளிராகவு மிருக்கும். ஆதலின் இவ்வீட்டி னுட்புறத்தில் அவர்கள் சிறிது சௌக்கியமாக வாழ்வார்கள். பனிச்சுவர்கள் இலேசாயிருப்பதால் வீட்டினுட்புறத்தில் வேண்டிய சூரிய வெளிச்ச மிருக்கும். இருட்டில் ஒரு வகை மிருகத்தினின்றெடுக்கப்பெறும் எண்ணெயைக் கொண்டு விளக் கேற்றிக் கொள்வார்கள். வட்டவடிவாகவும் கண்ணாடியாற் செய்த பெரிய பந்துகளைப்போன்றுந் தோன்றும் இவ்வீடுகளுக்கு ஒவ்வொரு கதவும் பனிப் பலகையால் செய்து மூடிவைத்துக் கொள்வார்கள். இவைகளைத்தவிர, தரையின்கீழ் அதிக ஆழத்தையுடைய சுரங்கங்களையும் வெட்டி வைத்துக் கொண்டு, சகிக்கமுடியாத குளிர்காலங்களில் அவைகளிற் றங்கி வசிப்பார்கள்.

இவ்வியற்கை மக்கட்கு, எழுதப்படிக்கத் தெரியாது. ஒருவிதமான பாஷையை மட்டும் பேசிக் கொள்கின்றனராம். இவர்கள் தோற்றத்தில், பழைய காலத்து மலை வாசிகளைப்போல் காணப்படுகின்றனர். இவர்களுக் குள் யாதொரு சட்டதிட்டமும் கிடையாது. வயோதிகர்கள் சொல்வதை எல்லோரும் கேட்டு நடப்பார்கள். இவர்களுக்குள் உயர்வு தாழ்வுங் கிடை யாது. அரசன் தலைவனென்பவர் ஒருவருமிலர். ஆனால் ஒவ்வொருவரும் சிறந்த நற்குணங்களைப் பெற்றிருக்கின்றார்கள். அவர்களுக்குள் சண்டை சச்சரவு உண்டாகுமெனத் தோன்றவுமில்லை. அன்னிய தேசத்தாரைக் கண் டால் அவர்களுக்கு வேண்டிய உபசரணைகள் செய்ய விரும்புகின்றனர்.

குழந்தைகள் தம் தாய் தந்தையருக்குப் பணிந்து நடந்து கொள்கின் றன. பெற்றோரும் குழந்தைகளின்மீது அளவுகடந்த அன்பு கொண்டிருப் பதால் குழந்தைகள் குற்றஞ் செய்துவிட்டாலும் அடித்துத் தண்டிப்பதில்லை. ஆனால் பெண் குழந்தைகள் ஏதாவது குற்றஞ் செய்தால் மிகவுந் துன்புறுத்து வார்கள்.

20 வயதிற்குமுன் பெண்களை மணஞ்செய்து கொடுக்க மாட்டார்கள். மணம் அவ்வக்கூட்டத்தார் முன்னிலையில் இவன்தான் மாப்பிள்ளை, இவள் தான் பெண், என்று நிச்சயிப்பதுடன் முடிந்துவிடும். அப்பொழுதே மாப் பிள்ளை, தன் வீட்டிற்குப் பெண்ணைக் கூட்டிக்கொண்டு போய்விடுவான். வீட்டை யடைந்ததும் பெண்ணின் நெற்றியில், தன் கூட்டத்தாருக் குண் டான அடையாளக் குறியைக் (V என்ற வடிவுள்ள பச்சையை) குத்திக் கொள்ளச் செய்வான். தம்மை அலங்காரஞ் செய்துகொள்ள விரும்பும் பெண்கள், நெற்றி கன்னம் முதலியவற்றில் நேர்கோடுகளாகப் பச்சை குத்திக் கொள்வார்கள். கணவன் இறந்தவுடனே, மனைவியைத் தன் சுற்றத் தாரில் ஒருவன் அவளை மணஞ் செய்துகொள்வான். இவர்களுக்குள் ஒருவர்க் கொருவர் தம் மனைவிகளை மாற்றிக்கொள்வது முண்டு. ஓரிடத்தைவிட்டு இன்னோரிடத்திற்கு ஒருவன் செல்லும்போது தன் மனைவிக்குத் தன்னுடன் போவதற்கு விருப்பமில்லாவிடின், அக்கூட்டத்தாரில், அவனுடன் போகப் பிரியமுள்ளவள் ஒருத்தியை யனுப்பிவைப்பார்கள். இவளுடைய கணவு

னுக்குத் தன் கணவனுடன் செல்ல விருப்பமற்றவள் மனைவி யாவாளா. சாதாரணமாய்ப் பெண்கள் ஆண்களுக்குக் கீழ்ப்பட்டவர்களென்ற எண்ணம் இருந்துவருகிறது. ஒருவனுக்கு அதிகமான பெண்கள் பிறந்தால், அவற்றில் அழகுடைய ஒரு பெண்ணை மட்டும் வைத்துக்கொண்டு மற்றவர்களைக் கொன்றுவிடுவார்களாம். சொற்ப இலாபத்திற்கும், உணவுப் பொருள்கட்கும், தம் பெண்டிரை விற்றுவிடுவது முண்டு. வீட்டுவேலை முழுவதையும், அவ் வீட்டுப் பெண்களே செய்யவேண்டும். ஒருவனுக்கு எத்துணை ஆண்மக்களிருப்பினும் அவரவர் மணஞ் செய்தவுடனே தனித்தனியாய் வீடு கட்டி வாழ ஆரம்பிப்பார்கள்.

துருவ தேசத்தில் வசிக்கும் கரடி சீல் என்பனவற்றின் தோல்கள் தான் அவர்களுக்கு உடைகள். ஆண் பெண் அனைவரும் பெரிய போர்வைகளைப் போர்த்துக்கொண் டிருப்பார்கள். மேற்சொன்ன விலங்குகளின் தோல் மிகக் கெட்டியாகவும் உறுதியாகவு மிருப்பதால் எத்தகைய குளிரையும் தாங்க இயலும்.

இத்தகைய இயற்கை வாழ்க்கையைக் கொண்ட மக்களிடத்திலும் இப்போது மெல்லமெல்ல நாகரிகம் பரவ ஆரம்பித்திருக்கிறது. பலவிடங்களிலுமிருந்து துருவ தேசத்திற்குச் செல்லும் பிரயாணிகள் அவர்களுக்குச் சில முக்கிய பொருள்களைக் கொடுத்து அவைகளின் உபயோகங்களைத் தெரியக் காட்டி வருகின்றனர். விறகு, நெருப்புக்குச்சி, துணி, உணவுப் பொருள்கள் முதலியவைகளைத் தற்காலம், வாங்கி உபயோகித்து வருகின்றனராம். அவ்விடங்களை விட்டு மத்திய பூபாகங்களில் வந்து வசிக்குந் துணிவுமட்டும் இன்னும் அவர்கட்கு ஏற்படவில்லை.

---

## சொற் பிதிர். எண் 1.

| | | |
|---|---|---|
| 1. த்போஆனிதினந் | 5. ரிசான்அ | 9. ரிறுயாவிசா |
| 2. கர்க்ம்ளபோ | 6. தசாந்தாரவேம் | 10. நனைன்ரகசெம் |
| 3. சம்லஞ்ச | 7. மைழக்கிவாவ்ய்செ | 11. விராடன்தி |
| 4. ரம்ளகே | 8. டட்ந்ம்தோபூ | 12. பப்லதிசிம்ரகா |

### விடை கொடுக்கும் நேயர்க்குரிய விதிகள்.

1. மேலே குறிப்பிடப்பட்டிருக்கும் எழுத்துக்களை முறைப்படுத்தினல் அர்த்தமுள்ள வார்த்தையாகும். 2. மேற்கண்ட பிதிரின் விடைகள் ஜனவரி மாதம் 31உக்குள் வந்து சேரவேண்டும். 3. "ஆனந்தபோதினி" சந்தாதாரர்களுக்கு மாத்திரந்தான் இந்தப் போட்டியில் இடமுண்டு. விடை அனுப்பும்போது சந்தா எண் குறித்து எழுதவேண்டும். 4. முழுதும் சரியான விடை கொடுப்பவருக்கு பாக்கெட் கடிகாரம் ஒன்று இனமாக அளிக்கப்படும். 5. ஜனவரிமீ 31 தேதியில் முதன் முதலாகப் பிரிக்கப்படும் சரியான விடைக்கே பரிசு கொடுக்கப்படும். 6. சொற்பிதிரைக் குறித்து யாதொரு கடிதப் போக்கு வரவும் வைத்துக்கொள்ள முடியாது. 7. சொற்பிதிர் மானேஜருடைய தீர்ப்பே முடிவானதாகும். 8. விடையுடன் ஒரு அணு ஸ்டாம்பு அனுப்பவேண்டும். 9 விடைகள் அடியிற்காணும் விலாசத்துக்கு அனுப்பப்படவேண்டும்.

மானேஜர் (சொற் பிதிர்),

**ஆனந்தபோதினி ஆபீஸ்.**






# கிருஷ்ணஸிங் அல்லது துப்பறியும் சீடன்.

(278-ம் பக்கத் தொடர்ச்சி.)

**ஆரணி-குப்புசாமி முதலியார்.**

அவர் அறைக்குள் அதிக தூரம் செல்லுமுன் தன் ஜேபியிலிருந்து ஒரு குச்சியை யெடுத்துக் கிழித்தார். உடனே பலத்த மனிதன் சட்டென்று அவர்மேல் பாய்ந்து கூச்சலிடாதபடி அவர் தொண்டையைப் பிடித்துக்கொண்டான். இருவர்க்கும் சற்று சச்சரவு நேர்ந்தது. அதன்மேல் குள்ளன் சேன்ட் பேக்கினால் அடித்தான். இருட்டானதால் அடிசரியான விடத்தில் படவில்லை. அதனால் பலத்தவன் கத்தியால் குத்திக் கொன்றான். என் தந்தை குப்புறக்கவிழ்ந்து விழுந்துவிட்டார். அதன்பின் பலத்தவன் விளக்கை யேற்றினான். பிறகு பிராணன் சரிபாய்ப் போகட்டுமென்று குள்ளன் மறுபடியும் சேன்ட் பேக்கினால் கழுத்தின்மேலடித்தான்.'' என்றான்.

**இன்ஸ்பெக்டர் :**—நீ இவையாவும் எப்படிக் கண்டு பிடித்தாய்?

**ஆனந்தஸிங் :**—அவர்கள் பூட்டை யுடைத்தபோது குள்ளன் நின்றவிடத்தில் அவன் தொப்பி சுவரில் உராய்ந்திருந்தது. அலமாரியிலிருந்த சாமான்கள் ஒரு உயரமான தடித்த மனிதன் அங்கு சாய்ந்து நின்றால் அவன் தோள்பட்டு எப்படிக் கலைந்து போமோ அவ்வாறு கலைந்திருந்தன. அதே சமயம், அலமாரியிலிருந்த கடியாரமும் அவன் தோளால் சாய்ந்துவிட்டதால் உடனே ஓடாமல் நின்றுவிட்டது. அப்போது மணி ஐந்தரை.

குள்ளனே முதலில் "சேன்ட் பேகி''னால் அடித்தவன். எப்படி யெனில் அடி பின்பக்கம் கழுத்திற்குமேல் சிரசிற்பட்டது. உயரமானவன் அடித்திருந்தால் தலைமேல் உச்சியிற்பட்டு உடனே கொன்றுவிட்டிருக்கும். அவர் ஸ்மரணை தப்பியபோதுதான் கத்தியால் குத்தப்பட்டார். ஏனெனில் குத்து நேராய் நிதானமாய்க் குத்தியதே யன்றி இருவர் சச்சரவில் கைபோனபடி குத்தியதல்ல.

தீபம் தந்தையால் ஏற்றப்படவில்லை. ஏனெனில் அவர் சந்தடி யுண்டாகாத ஒருவித தீக்குச்சியை யுபயோகிப்பது வழக்கம். அது கொளுத்திய உடனே அணைந்துபோய் அவரருகில் கீழே விழுந்துகிடக்கிறது. நாங்கள் உபயோகிக்காத வேறுவித தீக்குச்சி யொன்று பெரும்பாகம் எரிந்துபோய் ஜமக்காளத்தின்மேல் விழுந்துகிடந்தது. குள்ளனுக்கு தீபம் எட்டாது. மற்றவனே ஏற்றியவன்.

பலமான தடித்த மனிதன் ஒரு சாம்பல் நிறமான மேல் அங்கி யணிந்திருந்தான். இதை யெப்படிக் கண்டு பிடித்தேனெனில், என் தந்தையின் ஒரு கரத்தில் அந்த முரட்டுக் கட்டையிலிருந்த உரோமங்களில் சில விருந்தன-மற்றொரு கரத்தில் இரண்டு மீசை உரோமங்களிருந்தன-அவை கறுப்புச் சாயம் போடப்பட்டவை-அடிப்பக்கம் மயிரின் சுபாவ நிறம் தெரிந்தது; அவை முதல் சச்சரவில் பிடுங்கப்பட்டவை யாதலால்தான் என்றான்.

இவன் சாமர்த்தியத்தை யறிந்த இன்ஸ்பெக்டர் மிக்க ஆச்சரிய மடைந்தார்.

**ஆனந்:**—"நான் துப்பறியும் தொழில் செய்யச் சக்தி யுடையவனே யென்று தெரிவிக்கவே இவையாவும் தங்களுக்குக் கூறினேன். என் தந்தை என்னை முதல்தரமான துப்பறிபவனுய்த் தேர்ச்சி செய்தார். ஆகையால் இக்கொலையாளிகளை நானே கண்டு பிடிக்கும்படி தாங்கள் அனுமதி யளிக்கவேண்டும். கொன்றவர்களை மட்டுமல்ல, இதற்கு ஏற்பாடு செய்தவர்களையும்" என்றான்.

**இன்ஸ்:**—நான் அப்படிச் செய்யலாகாது-கொலை நடந்தது பகிரங்கப்படுத்தப்பட வேண்டும்-என் ஆட்கள் கொலையாளிகளைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டும்.

**ஆனந்:**—அது உண்மையே. இதனல் ஒரு வித்தியாசமும் நேராது-கொலையை நீங்களே தற்செயலாய்க்கண்டு பிடித்ததாயிருக்கட்டும்-நீங்கள் நடக்க வேண்டிய முறைமைப்படி நீங்கள் நடந்து கொள்ளுங்கள். என்னைப் பற்றி யாருக்குமே ஒன்றும் தெரியாது. என்னைப்பற்றிய பிரஸ்தாபமே வேண்டாம். எனக்கு இப்போது தங்கள் உதவி வேண்டும். பின்னும் ஒருதரம் வேண்டியிருக்கும்-அப்படிக்கின்றேல் இங்குவந்து தங்களுக்குத் தொந்திரை கொடுத்தே யிருக்கமாட்டேன்" என்றான்.

---

# மதிப்புரை.

**வாத வைத்திய நூல்:**—இதில், யூகிமுனி பூரணம் - 100, யூகிமுனி கரிசல்-152, அகஸ்தியர் ஷண்முக ஜாலமென்னும் சர்ப்பராஜக் குளிகை-43 ஆகிய மூன்று அரிய சித்த வாத வைத்திய நூல்கள் அடங்கியிருக்கின்றன. சித்த வைத்தியம் தலையெடுக்க முற்பட்டிருக்கும் இக்காலத்தில் மேற்படி நூல்கள் வெளியாயிருப்பது சித்த வைத்தியத்திற்கு ஆக்கத்தைத் தருவதாம். யூகிமுனி கரிசல்-36, யூகிமுனி வாதாங்க தீக்ஷைவிதி-300, யூகிமுனி மதிவெண்பா-100 முன்னரே அம்பா விலாச புத்தகசாலையாரால் வெளியாக்கப்பட்டிருக்கின்றன வென்று தெரிகின்றது. இப்போது வெளியாயிருக்கும் மேற்படி மூன்று நூல்களும் சேர்ந்து ஒரே கட்டடமாக ஒரு ரூபாய்க்கு, சென்னை, கோமளேசுவரன் பேட்டை, மவுண்ட்ரோட் போஸ்டு, அம்பாவிலாச புத்தகசாலை, ம. ஷண்முக முதலியாரிடத்துக் கிடைக்கும். இவை பிழையறப் பரிசோதிக்கப்பட்டு நல்ல காகிதத்தில் அச்சிடப்பட்டிருக்கின்றன.

***

**சீவ கர்ருண்ய விளக்க வினு விடை:**— இந்நூல் சைவத் திருவாளர், காவித் தண்டலம்-வேதாசல முதலியா ரவர்களால் இயற்றப் பெற்றது. திவான்பகதூர். ஸர். T. N. சிவஞானம் பிள்ளை Kt அவர்கள் எழுதிய ஆங்கில மதிப்புரையையும், சைவத் திருவாளர், கயப்பாக்கம் - சதாசிவ செட்டியார் B. A. அவர்கள் எழுதிய தமிழ் முன்னுரையையுங்கொண்டது. தடை விடை வடிவில் பன்னூல்மேற்கோள்களுடன் சீவகாருண்யத்தைச் சிறப்பாக விளக்குவது. அணு 10

கிடைக்குமிடம்:—

**சிவகாமி விலாச அச்சுக்கூடம்,**

சென்னை.

(இப்புத்தகங்கள் எம்மிடமும் கிடைக்கும்)

# பாஞ்சால சிங்கம்

## திருமிகு லாலா லஜபதிராய் அவர்களுடைய பிரிவாற்றுமைக்கு வருந்திக் கூறிய

# கையறு நிலை.

(R. S. மயில்சாமிக் கவிராயர்.)

(1) சிந்தா மணியே தேடரிய ரத்தினமே
எந்தாய் லஜபதியே என்னா ளுனைக்காண்போம்
சிந்தா குலமளித்துத் தேவருல கெய்தினையால்
அந்தோ! துயரமதை ஆற்றுகிலோம்! ஆற்றுகிலோம்!!

(2) பஞ்சாப்புச் சிங்கமெனப் பாருலகோ ரெல்லோரும்
நெஞ்சார வேதுதிக்கும் நேர்மைமிகு லாலாஜி!
எஞ்சாப் புகழேற்று ஏகினைநீ யென்றாலும்
அஞ்சா வலித்திறனை யார்க்களித்தாய் பாரதத்தே.

(3) முன்னிருந்து வைதீக முழுமக்கள் சுயநலத்தால்
பின்னிவைத்த கோவிலெனும் பேழைகளி னுட்புறத்தில்
பன்னகங்கள் பலப்பலவாய்ப் படுத்திருப்பக் காண்பதினுல்
என்னரிய சோதரரே இழுததெறிமின் என்றனையே.

(4) சாதிமதத் தளையறுந்தால் தன்னுட்சி பெறுவமென
ஓதிடுமெங் குணக்குன்றே உத்தமனே லாலாஜி!
தீதிழைக்கும் வஞ்சகர்தம் திட்டிவிடம் பட்டாயோ
ஏதிருந்த தென்னேயோ எங்கோவே! எங்கோவே!!

(5) இந்தியத்தாய் ஏங்கியழ யாங்கள்துயர்க் கடல்மூழ்க
பந்துஜனம் பரிதபிக்கப் பாருலகை நீத்தனையால்!
எந்தவகை சுயவாட்சி எய்துவம்யாம் எனநாளும்
சிந்தனைசெய் சோதரர்க்குத் தேறுதல்யார் சொல்வாரோ!

(6) லாலா லஜபதியே நாட்டின்விடு தலைக்காக
நீலாப் படித்தறிந்தும் நின்தாய்ப் பணிபூண்டாய்!
ஏலாச் சிறைவாசம் ஏற்றாய் சிலகாலம்
காலாந் தரமதனில் கனவடியும் பட்டனையே!

(7) ஐயா லஜபதியே அன்றொருநாள் அரசியலார்
மையார் மனத்தவராய் மறுநா டுனையோட்ட
குய்யோ முறையோ வெனக்குமுறி அழுதவர்க்கு
ஐயோ! உனையிழந்தால் ஆறுதலும் உண்டேயோ!

(8) செங்காவி மலர்த்தடஞ்சூழ் சென்னைநகர் போந்தருளி
தங்கினாய் சிலநாட்கள் தலத்திலுளோர் தன்மைகண்டாய்
சங்கையின்றி யிந்நகர்க்கோர் தயானந்தர் தேவையென்றாய்
எங்கோவே லாலாஜி ஈண்டொருகால் வாராயோ!

(9) பொய்யாகும் வாழ்வெனநீ போனாலும் புகழ்வேந்தே!
கையா தரவின்றிக் கண்கலங்கும் பாரதத்தார்
உய்யும்வகை செய்தருளல் உனதுகட னாதினால்
வையமிசை இனியொருகால் வாராயோ! வாராயோ!!

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

**விபவ௵ தை௴—கலியுகாதி 5030, சாலிவாகனம் 1851,**
**பசலி 1338—கோல்லமாண்டு 1104—ஹிஜரி 1347,**
**இங்கிலீஷ் 1929௵—ஜனவரி௴—பிப்ரவரி௴**

| தைமீ | ஜனவரி. | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | ஞா | துதி5-50 | திரு3-55 | அ3-55ம | **சங்காராந்தி பண்டிகை** |
| 2 | 14 | திங் | திரி8-10 | அவி7-38 | சித்60 | **மாட்டுப்பொங்கல்** |
| 3 | 15 | செவ் | சது9-35 | ச10-15 | மர60 | கரிநாள் |
| 4 | 16 | புத | பஞ்9-43 | பூர11-53 | அ11-53சி | சஷ்டி, எற்றம் ஸ்தாபிக்க |
| 5 | 17 | வியா | சஷ்8-43 | உத்12-20 | சித்60 | காதுகுத்த, வித்தியாரம்ப |
| 6 | 18 | வெ | சப்6-35 | ரே11-43 | அமி60 | விவாகம், சீமந்தம் |
| 7 | 19 | சனி | அஷ்3-13<br>நவ58-38 | அஸ்9-48 | சித்60 | அவமாகம், மூலிகை உபயோகிக்க, அடுப்புவைக்க |
| 8 | 20 | ஞா | தச52-58 | பர6-48 | சித்60 | **கிருத்திகை,** கடன்தீர்க்க |
| 9 | 21 | திங் | ஏகா46-15 | கி⁘2-40<br>ரோ57-38 | ம2-40அ | சர்வ, மத்வ ஏகாதசி, அவமாகம் |
| 10 | 22 | செவ் | துவ38-50 | மிரு51-48 | சி51-48ம | அவமாகம், கூர்மதுவாதசி |
| 11 | 23 | புத | திர30-53 | திரு45-33 | சித்60 | கரிநாள், பிரதோஷம் |
| 12 | 24 | வியா | சது22-50 | பு-39-23 | அமி60 | **பௌர்ணமி**; விதைவிதை |
| 13 | 25 | வெ | ○14-58 | பூச33-30 | மர60 | **தைப்பூசம்** |
| 14 | 26 | சனி | பிர8-0 | ஆயி28-30 | ம28-30அ | புஷ்ய பகுளம் |
| 15 | 27 | ஞா | துதி2-3<br>திரி57-40 | மக24-48 | ம24-4சி | அவமாகம் |
| 16 | 28 | திங் | சது55-10 | பூர22-53 | சித்60 | சங்காஷ்ட சதுர்த்தி |
| 17 | 29 | செவ் | பஞ்54-40 | உத்22-50 | அ22-50சி | கரிநாள் |
| 18 | 30 | புத | சஷ்56-25 | அஸ்24-55 | ம24-55சி | |
| 19 | 31 | வியா | சப்60-0 | சித்29-0 | சி29-0அ | |
| 20 | பிப்ரவரிமீ 1 | வெ | சப்0-13 | சுவா34-53 | சித்60 | |
| 21 | 2 | சனி | அஷ்5-33 | விசா42-5 | சித்60 | |
| 22 | 3 | ஞா | நவ11-55 | அனு49-55 | மர60 | |
| 23 | 4 | திங் | தச18-45 | கே58-13 | சித்60 | |
| 24 | 5 | செவ் | ஏகா25-35 | மூல60-0 | அமி60 | |
| 25 | 6 | புத | துவ31-23 | மூல5-8 | ம5-8அ | |
| 26 | 7 | வியா | திர36-10 | பூரா11-35 | சித்60 | |
| 27 | 8 | வெ | சது39-40 | உத்16-45 | சி16-45ம | |
| 28 | 9 | சனி | அ●42-0 | திரு20-48 | சித்60 | **சர்வத்திர தை அமாவாசை** |
| 29 | 10 | ஞா | பிர42-55 | அவி23-35 | ம23-35சி | மாக சுத்தம், அவமாகம் |
| 30 | 11 | திங் | துதி42-50 | ச25-20 | சி50-11ம | கும்பரவி நா-53-6 சந்திர தெரிசனம் |

| | | | |
|---|---|---|---|
| | குரு | செவ் ராகு | |
| சுக் | 12-கும்ப-பு<br>14-மீன-சுக்<br>20-மக-புத | | |
| சூரி புத | | | |
| சனி | கே | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE " ANANDA BODHINI " POWER PRESS,
LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.